


உ

சிவமயம்.

ஓம்சற்குருப்யோநம:

# ஸ்ரீ பனையூர்க் குருநாதன்

# பன்மணிமாலை.



இஃது

குன்றக்குடி மேலமடாலயம்

மகாசந்நிதானம்,

ஸ்ரீமத் கணபதி சுவாமிகள் அவர்களின்

அநுமதியின்படி

---

குன்றக்குடி வைத்தியம்,

**மு. கணபதியா பிள்ளை அவர்களால்**

இயற்றப்பெற்று

---

கல்லல்

ஸ்ரீலஸ்ரீ சு. கி. கரு. நா.

நாச்சியப்ப செட்டியாரவர்களால்

மதுரை,

ஸ்ரீ ஜெகதாம்பாள் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.

---



விலை] 1930. [அணா 12.

# பனையூர், ஸ்ரீ தெக்ஷிணாமூர்த்தி சுவாமிகள் மடாலயம்.



கணபதி சுவாமிகள், மேலமடம், குன்றக்குடி.

உ

# ஸ்ரீ பனையூராண்டவர் சிவலிங்கபந்தம்.




## இலிங்கச் செய்யுள் விருத்தம்

உதித்திடும் புவனமெல்லா முவக்கமெய்ப் பனையூரோங்கி
மதித்திவி னினைப்புமும்மை யறிவிசை சுவாமிபுத்தேள்
கதிதவ ஞானமேகொள் காரண ஞானேனே
துதித்திடுந் துரியாதீத சோதிகொள் சுயம்புலிங்கம்.

---

## திருவாச்சிமாலைமாற்று கலிவிருத்தம்.

நேயனுயடி யானித மோயஞா
ஞயனா னானீ வெடாயதோ
தோயடா வெனீ ரானாஞயனு
ஞாயமோதனி யாடிய னுயனே

## பனையூர், ஸ்ரீ குருநாதன் மகாரதபந்தம்.



## ஸ்ரீ தெச்சிணாமூர்த்தி சுவாமிகள் கமலபந்தம்



வேண்பா.

ஆதிவிதி நீதிமதி சோதியதி சோதியுதி
ஆதினஞ்செய் சூழ்பனையூ ராண்டவனே—மாதிருவி
லச்சணை யென்குருவே ஞானவருட் டண்டையந்தா
டச்சிணா மூர்த்தியே தா.

---

உ

ஓம்சற்குருப்யோநம:

## காப்பு.

### ஸ்ரீ விநாயகர்துதி.

வெண்பா.

1 தாராருந் தென்பனையூர்ச் சங்கரநா ராயணரின்
சீராருந் தெச்சிணா மூர்த்தியரு—ளோராணண்
யானைக் கியம்புகவே யாத்திடினாற் றென்னகமே
யானைக் கியம்புகவே யாப்பு.

### ஸ்ரீ முருகபிரான் துதி.

யமகக்கலித்துரை.

2 மாதங் தனம்பூ நிலையாமை யென்று வணங்குவர்கோன்
மாதந்த தந்தி யிளையானழகியான் மஞ்ஞைவெற்பன்
மாதந்த வள்ளி மணவாள னேழைபங் காளனன்ஞண்
மாதங் தனையனைச் செற்றான் மகனையான் வாழ்த்துவனே

### ஸ்ரீ பரமசிவன் துதி.

கோச்சகம்.

3 சிந்தா விழித்துவர்வாய்த் தேமொழியம் பாளுடனே
சிந்தா ரவிதழிச் செஞ்சடையின் னிக்குலுங்க
சிந்தா மணிவிளக்காய்ச் சிற்சபையி லாடுவரை
சிந்தா குலந்தவிரச் செப்புதியென் னெஞ்சகமே.

### ஸ்ரீ பரமேஸ்வரி துதி.

கலிவிருத்தம்.

4 வாலையாழி வளைந்ததி லூரெரி
வாலையாழி கொடுதன் கர்க்கிளே
வாலையாழி மனோன்மணி ஞானசு
வாலையாழி தபாதம் வணங்குவாம்.

## ஸ்ரீ நாராயணர் துதி.

சந்தம்.

5 இரவியொன்றைய முரைகடம்பல
விடையிலங்கு தனிகரிகம்
பரவிடும்பலவுட லுளுந்திகழ்
பகவனைந் தொழிலுடையவன்
புரவிதங்கிய விரதமொன்றமர்
பொருகளங்கொடு வருபவன்
வரவிருந்தகை மனதினின்றருள்
வளரவஞ்சலி புரிகுவாம்

## ஸ்ரீ இலக்குமி துதி.

விருத்தம்.

6 காண்பவன் றனைக்காணாது காண்பதிற் சுழன்றுநாளும்
வீண்பவத் தழுந்துமென்றன் வெவ்வினை யகலஞான
மாண்புடைப் பெரியோர்தம்பால் வைத்தபாற் கடறந்தாளைப்
பூண்புடைத் தனப்பொன்னாளைப் போற்றுதி புகழ்ந்துநெஞ்சே

## ஸ்ரீ வீரமாகாளியம்மன் துதி.

வேறு.

7 மோகாதி முனிந்து முரண்டவிரத்
தேகாதி மறந்தவர் சிந்தையிலே
வாகாக வளர்ந்திடு ஞானவிரன்
மாகாளி மலர்ப்பதம் வாழ்ந்திடுவாம்.

## ஸ்ரீ இராமகிரியார் துதி.

அறுசீர்

8 சகத்தினையோர் திரணமெனத் தான்மதித்துத்
தவங்காக்குந் தலையாயாரு

மகத்துவத்தை வியந்தேற்று மலர்வனஞ்சூழ்
பழனியூரில் வளருமெங்கோன்
சுகத்திரையாஞ் சங்கரநா ராயணர்க்கன்
றருள்சுறந்த தூரியாதீத
வகத்தியராம் ராமகிரி யப்பனடி
வினைதீர வகத்துள்வைப்பாம்.

## ஸ்ரீ உபாசனமூர்த்தி துதி.

அறுசீர்.

(9) திருவனத்தை யுடைத்தடத்திற் றிகழ்ந்துமைபா
லருந்தியிருட் சிலைசூராய்ந்து
திருவனத்தை யுடையமுங்கிச் சிவந்தவடி
வேலெடுத்துச் சிவனுக்கோதி
திருவனத்தை யுடையானைச் சிறையிலிட்டுத்
தெய்வானை வள்ளியோடுந்
திருவனத்தை யுடைச்சிகண்டி வரையுரையுஞ்
செவ்வேடா டினஞ்சிந்திப்பாம்.

---

பழனியூர்

# ஸ்ரீ தெச்சணமூர்த்தி சுவாமிகள்

## சரித்திரக் கலிவெண்பா.

நூல்.

ஆதிப்பொருளா யகண்டபரி பூரணமா
சோதிப்பிரம சுகவடிவாய்ப்—பூதமைந்தும் (1)

பண்டை மறையும் பகர்ந்துலகை யுண்டாக்கி
விண்டுவா யீசனாய் வேதாவாய் —மண்டுபல (2)

சீவறைபுங் கார்க்குந் திருவருட் சம்மதத்திற்
றேவரமரர்புகழ் சீர்வாழ்க—காவிடையி (3)

லங்கொண்டல் புக்கவலர் கனிதேஞ் சிந்திமுது
கக்கையெனப் பொங்கிக் கமழ்ந்தலையாஞ்—செங்கைகொடு

முத்தங்கொழித்திலஞ்சி முற்றிமரு கால்வழிபோய்த்
தத்திவயிற் ருமறையோ டேத்தும்ப—நத்தூதக் (5)

கெண்டைக ளாடுமலர்த் தொட்டில் கிடந்துறங்க
வண்டுகடா லாட்டு வளம்பெருக—பண்டமலை (6)

நிற்பதுபோ னெற்போர்க ணீள்களங்க ளெங்குமுறப்
பொற்பதுமை யன்னபல பூங்கொடியார்—நற்புருவம் (7)

வில்லென்று கட்கயலை வேட்டுவந்த புட்சிலவான்
செல்லமுகம் போமென்று தேனுட—பல்லழகைப் (8)

பார்த்து மணிமழுங்கப் பாரபயோ தாங்கண்
டார்த்த கோங்கின்மொட் டலர்ந் திடமேல்-போர்த்ததுகின்

முந்திநழு விக்கண் மோதிப்பறக்கு மின்னல்
மந்திகள்கண் கூசி மாமேற—வந்து நன்னீ (10)

ராடிக்குடங்கொண் டலங்கார மாளிகைசென்
றுடவர்க் கின்பாக்கு மறமிக்க—பீடுடைய (11)

பன்னூ லுணர்ந்தும் பாகதிசொன் னூலல்லா
னென்னூலும் பின்னூலா யெண்ணியொரு—தன்னையே 12

காணமுயல்வாருங் கண்டாருந் தொண்டர்தமிழ்
மாணவருந்தூய மறையோரும்—பேணுகின்ற (13)

செல்வத் திருப்பணையூர் செய்த தவத்தாலுதித்த
வில்வத் தளமணியு மெய்ப்பெருமா—னல்வடிவாய் (14)

சங்கர நாராயணவென் சற்குருமுன் பாலியத்திற்
றுங்கவி ராமகிரித் தூமுனியென்—றெங்குமதி (15)

ஐயனருத்தியா லாற்றருகிற் றீட்சைபெற்று
துய்யசிவ யோகத்திற் சொக்கியே—மெய்மறந்து (16)

பன்னாளிருந்திடவே பார்த்து மாதா பிதிரு
முன்னாதா சான்மலைசார்ந் தோதவே—முன்னவன்வந் (17)

தென்னைகொல் வேண்டுமென யெம்மரிய வேர்சுதர்க்கு
நன்மணஞ்செய் தில்வாழ நல்குமென—மன்னிவந்து (18)

கன்னியிருக்கு மிடங்கழன்று மன்றல்செயத்
தன்னருமைச் சீடரொடுந் தான்சென்று—முன்பெற்றோர் (19)

எண்ணம்போற் செய்து சின்னா ளில்வாழ்தியென்று சொல்வார்
விண்ணுமண்ணும் போற்றுமொரு மெஞ்ஞானி—நண்ணியுந்தன்

பிள்ளையாய்த் தோன்றுவனப் பிள்ளையுதிக்குந்தினத்தில்
உள்ளிவறுகுது மென்றேங்கல்செல—குள்ளமுனி (21)

சொற்போலே யில்லறத்தைச் சோராதியற்றிவறக்
கற்புடைத்தன் நாயகிக்குக் கற்பமுண்டாய்—பற்பலரும் (22)

மாதமீதென்ன மகவுபெறுஞ் சமய
மாதவனே ராசான்வந் தச்சிசுவைப்—பீதிற (23)

மான்தோன்மேற் கொண்டு வறவுரைக்க வவ்வாறே
யேந்தி யாசான்காத்தி லீயவும்—பாந்தமுடன் (24)

ஆனந்தக்கண்ணீ ரகநனைப்ப முத்தமிட்டு
ஞானப்பாலூட்டு நயம்வாழ்க—எனையரும் (25)

போற்றிசைப்பநன்கு புகழ்ந்து மகிமைசெப்பி
ஏற்றமிகு தெச்சிணா மூர்த்தியென—வேற்ற (25a)

பெயரிட்டழைக்கருகிற் பேணி நிற்குஞ்சீடர்
பயபக்தியோடுவர பார்த்து—மயன்மனிதர் (26)

கூடாவுனதுதவக் கூடத்தி லிச்சிசுவை
யாடாவோ ராதனத்தி னீகிடத்தி—நாடோரு (27)

முன்மனையை வந்தமுத மூட்டிப்போகச்செய்தி
என்னவுரைத்துவந்த எங்கோவே—யென்னாசே (28)

என்குருவே என்னறிவே யென்னுயிரே யென்பெருமா
னென்னிறையே என்னறிவே யேபிரபூ—என்னப்பா (29)

என்னையுடையானே என்கண்ணே மெய்ப்பொருளே
சின்னவயதிற் றுறந்தசீர் வாழ்க—மன்னர்பலர் (30)

வந்துதரிசித்து வாயார வாழ்த்திடவே
தந்தைமுன்சார்ந்த தவம்வாழ்க—வைந்தாண்டு (31)

சென்றுசிவயோக சாதனையிற் பன்னுளாய்
ஒன்றிவளர் தாதையைப்போ லொவ்வோர்நாள் —மன்றுக (32)

அப்பெரியார் வீற்றிருக்கு மப்படியே வாதனமிட்
டொப்பச்சில் போதிறுக்கு மூழ்வாழ்க—செப்புசிறு (33)

பாலருடனுடாமற் பந்துஜனம் தேடாமல்
ஞாலவேடிக்கைகளை நாடாமல்—சாலைகளிற் (34)

சென்றுதிரியாமற் றின்பண்ட மன்னமுதற்
றன்தாய் தந்தாலொளியக் கேளாமல்—நன்றவரு (35)

வேடத்தைக்கண்டால் விரைந்தோடிக் கும்பிட்டுக்
கூடத்தனைத்துவந்து கூர்ந்தமர்த்தி—வீடகத்து (36)

அம்மையைக் கூப்பிட் டடியார் பசிதணித்துந்
தம்மைப் புகழ்வதற்குத் தாமிசையா—நிம்மை (37)

மருமைப்பயன் வேட்டா மாஞானவித்தாய்
மருவுந் திருவருளே வாழ்க—பெருகீரொட் (38)

டாவரைக்குட் பல்வரைபோ யாங்காங் குலவுசித்தர்
தேவருறவேற்ற திரம்வாழ்க-பாவமறு (39)

வன்ஞோராற் பற்பலசித் தாடத்தெரிந்துபுலி
தன்மீது மேறிவருந் தாள்வாழ்க-தன்மாமன் (40)

மன்றலிடச் சொல்ல மறுக்கவென் மந்திரத்தா
லின்றிவரை யுட்கவைத் தென்மகளை—நன்நேரம் (41)

கல்யாணம் செய்து வைப்பேன் காணுமெனத்தமரோர்க்
குல்லாசமாய்ச் சொற் றுபாயமாய்—மெல்ல (42)

மருகரிடஞ்சென்று மலையடியிற் சாமத்
துருகெழுவிண் மீஞென்றை யோதி—வருகெனவே (43)

விண்டுவெடித்ததன விண்ணின் றெரிந்துவரக்
கண்டுபொடித் தாட்கொண்ட கண்வாழ்க—சுண்டலியை (44)

சென்னியிற்கொண்டு சிவமான தாதையுடன்
மின்னச்சமாதி செய்த மெய்வாழ்க—சந்நிதியில் (45)

தானுயிருந்து சகச நிட்டானுபவ
தேஞேர்ந்த சனமற்ற தேவாழ்க—பூனூம் (46)

வாவிக்குச்செல்லு மடவார் குடமுடைக்குந்
தேவதையைக் கட்டுஞ்செயல் வாழ்க-பாவுசுற்ற (47)

மஞ்சிப்பணிய வதட்டிவரும் போர்ப்படையின்
நெஞ்சுடைந் தோடவைத்த நேர்வாழ்க-மிஞ்சி (48)

யகத்தேதுதிக்கு மாசனுக் கோர்வல்ல
மகப்பேறளித்த வரம் வாழ்க—தொகுத்தவனின் (49)

றெம்மாற்பெறற்பால தேசுகெனப் புன்னகையோ
டெம்மார்வே போதுமென்ற வேர்வாழ்க-தம்மிடத்தே (50)

காசிப்பயணங் கழுறவந்தார்க் காங்கொருவர்
வாசதலஞ் சொன்ன வழிவாழ்க—பேசினேம் (51)

நேற்றுப் பொதிகையிலே நீபோ யவர்சுகத்தைப்
போற்றிவாவென்ற புதம் வாழ்க—சாற்றியவா (52)

ராங்கிருந்தார் செய்தனுப்பு பாதிப்பொற் றுட்டையிதழ்
தாங்கிப்பொன்னுக்கும் தகை வாழ்க-நீங்காத (53)

வன்பாலடிசினித்த மாராதித் துண்ணுநத்தி
தன்பாற் பொற்காசளித்த தாய்வாழ்க-முன்புவந்து (54)

தேவரீர் யந்திரமாய்ச் செய்தருளு மென்னவவ
ளாவல்போற் செய்த வரம்வாழ்க—சீவகதி (55)

வேண்டிவில்லி புத்தூரை விட்டகன் றடைக்கலமே
பூண்டவரைக் காத்தபொரை வாழ்க—வாண்டுபல (56)

பத்திமையாற் றெண்டுசெயப் பார்த்துபதே சித்தறிந்து
நித்தியா னந்தமென்று ணீவாழ்க-நத்துமொரு (57)

மன்னவர்பாற் றர்ம மடம்புதுக்க வெண்ணியன
தன்னு ளறிந்த தரம்வாழ்க-வின்னினைவே (58)

னென்றுதஞ் சீடர்க் கெதிரிலதி பொற்புதைய
றுன்றக்காண் பித்த துரை வாழ்க-உன்றற்கு (59)

விவ்வூர் சரியன்று வெகுதிகுன் றக்குடிக்கங்
கவ்வாறு மென்ற வருள்வாழ்க-செல்வம் (60)

நினைத்தபடி யாமெனவே நீறளித்தோர் காசிக்
கனுப்பித்தஞான வலைவாழ்க—மனத்தகலா (61)

இட்டமொடு மெய்ம்மை யீன்ற முத்துசாமி யைமுன்
சிட்டாய்க் கொண்ட சிவம்வாழ்க—அட்டியிலா (62)

வித்தைபல கற்பித்து மெய்நூல் சிலகொடுத்து
நத்தியுபதேசித்த நார் வாழ்க—சத்திசெபம் (63)

மாறுவடியார் மனங்குளிறுஞ் செந்தேனே
போதரிப்பார் பிதாவாழ்க—நோக (64)

எத்தனையோசித்து மியம்பவடி யார்க்காட்டிப்
பத்தரையாட்கொண்ட பதிவாழ்க—வத்ததனு (65)

வென்பாய்வடிய விருவிருப தாண்டுதவ
வன்னிவளர்த்த மகான்வாழ்க—தன்னையன்றி (66)

யாதுமிலாமையினு லாசையற்றுத் தான்றுணைப்
பாதகந்தீர்த்த பரன்வாழ்க—மூதரிஞோர் (67)

பாடிப்பணிந்து பாவசமாய்க் கூத்தாடி
ஏடவிழ்பூத்தூவு மெழில்வாழ்க-வீடுடைய (68)

நிர்விகற்பமோன நிராலம்ப நிட்டையிலே
சர்வமுந்தானுக் காண்டனம்வாழ்க-கர்வமிலா (69)

இந்திரியநிக்கிரக மெய்தமனோ நிக்கிரகம்
நந்தொளியோர்க் கூட்டு நலவாழ்க-பந்தந் (70)

தனுவைத்தா னென்று சகப்பிரமை கொள்ளா
தனைத்துயிராய் முற்றழகே வாழ்க—தனுகரண (71)

தத்துவங்களாய்ந்து தனதுவடிவந் தெரியுந்
மத்துவித சத்தனகம் வாழ்க-முத்தொழிலுஞ் (72)

செய்துசிதாகாச சின்மய விதேகமழை
பெய்தெனைக் காக்கும் பிரான் வாழ்க-பொய்த்தொழிற் (73)

கள்வர் பயந்தவிர்த்துக் காட்டிவிருந்தாலு
முள்ளங் கவரு மொன்றேவாழ்க—தெள்ளுபசுஞ் (74)

செந்தமிழ்க்கல்வி சிறியேனறியே னெனினுந்
தந்துசுய மாக்கியேதா தாவாழ்க—மந்திரமும் (75)

வைத்தியஞ் ஜோதிடமு மர்மம் புலமைபல
கைத்தொழிலுங் காட்டுங் கதிவாழ்க—நெய்த்தகுழற் (76)

பூங்கொடியார்கூடிப் புதுமைமயல் செய்திடினும்
நீங்கடியார்க்கேற்ற நிலைவாழ்க—பாங்கன்பர் (77)

கூடியொருகோடி கும்பல்பட வெல்லோர்க்கும்
நாடிநீந்த நயம்வாழ்க—பீடமறு (78)

கோர்புற் றெழுமதனை யொன்றுஞ் செயாதிரிவண்
சீர்பெற்ற தேவபதி யாமேபின்-போர்புத்ரன் (79)

வந்துபணி செய்விப்பான் வைகலுமேன் பாடுடைத்தாய்ச்
சந்தரதோர்ச் சவமுஞ் சாருமே-சிந்தையிர் (80)

வேண்டுவார் வேண்டுவன மென்மேற் றருமிதென்று
மாண்டு வந்தோர்க்கின்பூ றருள்சுரந்து-செண்டணிலும் (81)

பூமியிலு மீரொன்பான் வாத்தியமும் பொங்கவெங்குஞ்
சாமியென வானஞ் சாஞ்சொரிய-வோமெனவுஞ் (82)

சங்கரா சம்போ வரகா மாதேவா
புங்கவா வென்றும் புகழ்ந்துபல-வங்கையலர் (83)

தூவியொரு வர்க்கொருவர் தோன்றநி சயத்தைநவின்
றோவியமென் றேற்றி யுளங்கசியக்-கோவிலுக்குட் (84)

சென்றுசமாதிக் குகைபுகுந்து சோதியுட
னொன்றாய்க்கலந்த வுயிர்வாழ்க-தென்றோய் (85)

கனிவாயுரைத்தவணங் காட்சி நிதங்காட்டி
இனிய குன்றக்குடியி லேற்பார்—துனிதணித்து (86)

மேலமடமென்ன மேதாவி யோர்மதிக்க
வாலயந் தெர்ப்பமலர் வனமா-சோலைவளர்த் (87)

தீசனடியா ரிசைவதளித் தீகைமணி
யோசையாற் கூப்பிட்டு னூட்டியே-பூசைதவ (88)

மீகைதயை தாட்சண்ய சாந்த மிதமடக்கம்
யூகவிவேக சிவ யோகியாய்-வாக (89)

னதிவீர ராமன்கொல் வந்ததெனத் தென்னா
டதிசயித் தஞ்சி யடிபே-ணிதயசுத்தன் (90)

பன்னு ளடைத்திருந்த பால்வண்ண நாதர்திருச்
சன்னதியைச் சீர்திருத்துந் தார்வள்ளல்-முன்போல (91)

எல்லாரு மேற்றிக் கதியடைய உற்சவமும்
சொல்வளத்தார் செய்விக்கும் தூமுனிவன்—மல்லாசான் (92)

வாழுஞ்சமாதி மகாலயமுங் கண்ணோக்கி
ஆழுங்கருத்தோ டறிந்தோர்கள்—சூழமிளிர் (93)

பொற்பணிபோற் கற்பணியும் பூங்கோயின் மண்டபமும்
சிற்பப்படி நடத்துஞ் சித்தத்தான்-பொற்புடையோர் (94)

கண்டு வணங்குங் கணபதிச் சாமியுளங்
கொண்டு விளங்குங் குருவாழ்க— அண்ட (95)

ரரியப்ப மாதியர்க்கு மாயொனுத் தொண்டர்
வரிசையாந் தெய்வமெலாம் வாழ்க—துரிசிரிய (96)

நீதியுலகஞ் செழிக்க நீள்வான் கடல்வாழ்க
ஆதிபகவன் கருணை யேயார்க—வேதியர்நெய் (97)

வேள்வி விளங்குக மெய்பரவத் தீயவெலாந்
தூள்பட் டழிக தூயர்தீர—வேள்விடங்க (98)

ணீங்குக நல்லற முன்னிற்க வுயிர்யாவும்
பாங்கானுட் பூரித்துப் பாவுக—ஈர்ங்கிரிசூழ் (99)

தண்ணவணி மெச்சுந் தலமோங்கி ராமகிரி
விண்ணவர்சேய் வாழ்க வாழ்கவே. (100)

———

## பனையூர்ச் சந்த விருத்தம்.

தானன தானத் தனத்தத் தானன
தானன தானத் தனத்தத் தானன
தானன தானத் தனத்தத் தானன—தனதான

(1) காம விகாரக் கலக்கக் காரிகள்
காமுக மாயைத் துலக்கக் காரிகள்
காலணி பீலிக் கிலுக்குக் காரிகள் மதராசன்

காதைகள் பேசக் களிப்புக் காரிகள்
காசு கொடாருட் புளிப்புக் காரிகள்
காமினி வாசத் தெளிப்புக் காரிகள் முகமீதே

காமரி லார்மெய்ப் பழிப்புக் காரிகள்
காலையி னீரிற் குழிப்புக் காரிகள்
காலனை நேர்கற் பழிப்புக் காரிகள் எவரோடும்

காரிய மோகச் சிரிப்புக் காரிகள்
காளையர் மேலிற் குரிப்புக் காரிகள்
காதினி லோலைத் தரிப்புக் காரிகள் சிலநேரம்

காமனை யூசற் படுப்புக் காரிகள்
காலந வீனத் துடுப்புக் காரிகள்
காதலி லேசுற் றெடுப்புக் காரிகள் நெடுநேரம்

கால்பிடி மானக் குரைச்சற் காரிகள்
காளதுர் நீர்மெத் திரைச்சிக் காரிகள்
காகுவெ ணுபத் திரைச்சற் காரிகள் மயல்தீராய்

காமரி ராமக் குவட்டுத் தேவர்சொல்
காருணி யாதற் பரச்சிற் பூரண
காரண னேயெற் கருட்பொற் றுடரு பனையூரா

காசினி யோதிக் கதிக்குப் போமொழி
காவிய வேதக் கடற்குட் பூசுரர்
காணறி வாகிக் கிளைத்துச் சோதிகொள் பெரியோனே.

தானத்தானத் தனதன தனதன
தானத்தானத் தனதன தனதன
தானத்தானத் தனதன தனதன—தனதான

(2) பாடிப் பாடிப் பழகிய குழகிகள்
சோடித் தாடிச் சுழலவை யழகிகள்
பாலைப் போலப் பகிருள் குழலிகள் வெயில்வீசும்

பாசிக் கோவைப் பணிதிபன் மணிதிகழ்
மார்பிற் றூளிற் களபமு மெழுகிகள்
பாதப் போதிற் பரிபுர மொலிதர வெவரோடும்

கூடிக் கூடிக் குலவிடு கலவியர்
கோலச் சேலைக் சுழியிடு விழியினர்
கோவைக் காவிப் பவளமெல் லிதழியர் மயில்போலே

கூசிக் கூசிக் குறுநகை புரிபவர்
கோடைக் காலத் தருவிகள் பெருகுயர்
கோகுற்றலத் தலநல நிலமுல விளவேனில்

நாடிப் போமிச் சைகளிசை நளினிகள்
மேலிற் சாய்வுற் றூசிடு சரசிகள்
நாகப் போகப் படமினி மடமன மறவாதோ

நாரைக் கோதிப் பதிதரு புரவிக
ளூருற் றேரிக் குரவிட வருமிறை
ராமர்க் கோர்மைத் துணாவை விடமிட ரிடபார்வார்

தேடிப் போய்முத் திடுமதி முகவுமை
சீர்பெற் றேய்கற் றவரவர் கவர்சிவ
தீபச் சோதிச் சுழிமுனை வழிவரு குருநாதா

தேரிற் பாரிற் றிரிபவ ரயனரி
தேவக் கோனித் தலுநினை பலகனி
தேனைப் பூவிற் றெளிபனை நகர்வளர் பெரியோனே.

---

(3) தத்தத்தன தத்தன தத்தனனா
தத்தத்தன தத்தன தத்தனனா
தத்தத்தன தத்தன தத்ததனனா — தனத்தனதான

அத்தச்சரி கைக்குரி தைத்தழகார்
பட்டிட்டர விக்கை விதிர்த்தெழுமா
வச்சிட்டத னத்தை யசைத்து நிலா மதிப்ராபைவீச

அற்கற்றை மணிப்பணி கைத்தொடிவி
சத்தத்தை யுவப்பவு ரைத்தெமனே
ரக்கத்தை யுருட்டிவி ழித்திடுமா மதக்கொடியாரின்

துத்தத்துவர் நத்திதழ் வைத்துணுவா
யெச்சிற் பையல் சற்சனரைச் சருவான்
துச்சக்குண னற்பரை நற்ப்ரபுவே யெனக்கவிபாடி

துட்டைக்கிர கித்துலகுட் சிலநாள்
சுற்றிச்சில விட்டலை கட்குடி நாய்
சுத்தப்ரம வத்தை நினைத்திடுமா றருட்புணையாலே

சித்தத்தி திருத்த மிடத்திருவார்
வித்வத்தில் மிகுத்திட வத்வைதமா
சிற்சத்தி யனுக்ரக மிட்டிட நீ யெனக்கருள்வாயே

செப்பற்கரி தெற்கென வித்தகரோ
தொப்பற்ற விலட்சண சற்குருவே
தித்தித்திடு முக்கனி மிக்குதிர்மா வனச்சுனைமேவும்

அத்தக் கமலத்தெகி னக்குழுவே
மெத்தக் கமுகிற் பலபட்சிகள்பா
டப்புச்செய் யதிற்கயல் புக்கெழிலார் திருப்பனையூரா

அக்கைத்தரி யத்தரகத் தடியார்
துக்கத்தை யறுத்தவர் பத்தர்மனோ [யோனே.
வச்சத்தை யொழித்தறி வைத்தெரிவான் குணப்பெரி

---

(4) தத்ததத்தன தத்த தனத்தன
தத்ததத்தன தத்த தனத்தன
தத்ததத்தன தத்த தனத்தன

அத்தி மத்தக மொத்த தனத்தியர்
அத்தி மெத்து விழிக்க மனத்தியர்
அத்த பத்ம மலர்ப்பத முக்கனி தருவாயார்

அக்கி ரத்ன சரப்பளி யட்டிய
விட்ட சுத்த மிடற்றியர் பற்பல
வச்சடித் தொளிர் பட்டணி சிற்றிடை மடமாதர்

முத்துளுக்க நகைத்து மணத்திடு
புட்ப மெத்தை விரித்திடு கட்டிவில்
முத்த மிட்டிறு கத்தழுவிப் புணர் மயலாலே

முத்தி பெற்றிடு தற்கறி வைத்தரு
புத்தகத்துரை புத்தகம் மெத்தருண்
மொய்த்த பொற்கழ லைத்தொழு தற்கறி கிலனுள்வாய்

சத்தமுற்ற சமுத்ர மடைத்திரு
பத்துரக்கா னைச்செகு வித்தொரு
சர்ப்ப மெத்தையி னிற்றுயிலச்சுத னான்வேதா

தற்பை யிட்டிர விக்கிசை தற்பண
வர்ச்சனைச்செப முற்ற தவத்தினர்
சர்ச்சனர்க் கருள் விற்ப னருக்குள மகிழ்ஞானி

தட்ப புட்ப மிகுத்துதி கற்பக
மெற்கு னெற்கழல் புக்கமை விக்கிலென்
தர்க்கமப்பவெ னப்புகழ் பொற்பதி பனையூரா

தத்வவித்வ சகத்ரய நிட்கள
நிற்சலச்சுக நித்திய வத்வைத
சத்தியத்தை நிறுத்தறி வைத்தரு பெரியோனே

---

(5) தானதத்த தத்ததன்ன
தானதத்த தத்ததன்ன
தானதத்த தத்ததன்ன—தனதான

மோதிரக்கை தட்டிமெல்ல
வாவெனச்சி மிட்டிமுல்லை
மூரலிட்டழைத்து மல்லி கையினாலே

மூடிவைத்த மெத்தையில்வி
லாடியைப் பதித்த கல்லில்
மோதியொத் தணைத்து வெல்ல மிளநீர்தேன்

ஓதுதுப்பு தட்டி னல்ல
பால்குடித் தினித்த சொல்லை
யேர்மைநட் பினர்க்கு மிள்ள மனம்வாரா

யோசனைக்கு ணிற்க வுள்ள
மாசையுற் றுருக்கு மல்சை
யோகம் வைக்கு மிக்கசெல்ல மயில்போல்வார்

மீதுபுத்தி வைத்து வல்ல
மேவினைத் தமைத்த மல்ல
வீடுவிற் றிரக்கும் மொல்லை வாலாமோ

வேத முற்பவித்த தொல்லை
ஞான தற்பரத்தி னெல்லை
வேறு கற்பனைக்கு ளெல்லை கணியாத

கீத பொற்பதத்தை யல்ல
றீரகத்தை நித்த முள்ளு
கேடிலர் களிக்கும் நெல்வி பழனியூரா

கேவலப் படித்த வில்வி
காதைராட்சி முத்தர் கல்வி
கேள்வி பெற்றவர்க்கு ளுள்ள பெரியோனே.

(6) தத்தன தத்தன தனத்த தானன
தத்தன தத்தன தனத்த தானன
தத்தன தத்தன தனத்த தானன—தனதான

பட்டுவில் வெட்டெனி ரவிக்கை மூடிய
கச்சித வெற்பன தனத்து மேகலை
பச்சை வைரக்கொடி பதைக்க மாறென ஒளிவீச

பற்ப முகத்தினை மினுக்கி வேல்போடு
மிக்கொடி யைத்த புருவத்தி னூடிசை
பற்றிய மைத்தில தமிட்டு வாலிபர்க் கெமனேபோல்

மட்டலர் கட்டிய சடைக்குள் வாசனை
யிட்டம ளித்திட விருட்டு மாலையில்
மச்சிலிசைக் கவிபடித்து லாவிடு பொதுவாராம்

மட்டி களுக்குள மிளைத்தை யோவுள
கைப்பொரு ளைப்பறி கொடுத்து நோயோடு
மற்கட மொத்துட னுடக்கி வீவது மறவாள்வாய்

எட்டு மலைக்குட விருக்கும் யோகிகள்
நித்த நினைத்திடு நிருத்தர் பாலக
வெற்கொரு சற்குரு வெனக்குலாவிடு பனையூரா

இட்டலி யப்பம்வடை ரொட்டி பால்கனி
சர்க்கரை எட்பொறி முறுக்கு மோதக
மிக்கவல் மொக்கிய துதிக்கை நாயனு முருகோனும்

பட்டய முற்றமர் மயிற்க ளுடனாம
முத்தர் தமக்கருள் முகக்ருபாகர
பற்பல சித்தர்கள் படித்துலாவிடு சனையோராம்

பச்சிகொள் பத்திர தடத்து ளேகய
லுற்கை யெனப் புயல் கலக்கிமீள் தவ
பக்குவ முற்றனை களித்து வாழ்வுறு பெரியோனே.

---

(7) தனத்த தத்தன தனத்த தத்தன
தனத்த தத்தன தனதான

சிரித்துருக்கிகள் பணக்கிருக்கிகள்
திருக்கருக்கிக ளடியாரை
செருத்துலைக்கிகள் கருக்கலக்கிகள்
திருட்டு மட்டைகள் மதனாலே
விரித்த குட்டிகள் வெழுத்த பட்டிகள்
மினுக்கு மட்டிக ளெவரேனும்
விலைக் கிருட்டறை புகப்ரி யப்படு
வினைப் புரட்டிக ளெளியோரை
எரித் துரைப்பிகள் வெளிப் பசப்பிக
ளிரக்க மற்றவ ணைமீதே
இருத்தி முத்தவு மிரத்ன முத்தென
விறைத்த சுக்கில மளவேதோ
குறித் திடற்கரி தெனக் கினித்தவ
குணத்தை யுற்றருள் பனையூரா
குளிர்ச்சி பெற்றிடு மலைக் குகைச்சுர
குருக்கள் மெச்சிடு பெரியோனே.

---

(8) தந்தந்தந் தந்தந்தந்
தனந்த தனந்த தனந்த தனந்த
தந்தந்தந்தந் தந்தந்தந்தந்
தனந்த தனந்த தனந்த தனந்த
தந்தந்தந்தந் தந்தந்தந்தந்-தனந்ததனந்ததனந்த
தனந்த தனதான

வண்டுண்டண்டின் றண்டிடன் செண்டொண்
டுகொண்டை புரண்டு முருண்டு விளங்க
கும்பங் கொந்துங் கொம்பும் பிந்துங்
குவிந்திடு கொங்கை நிமிர்ந்து மிலங்க
வந்துஞ் சந்தஞ் சிந்துஞ் மஞ்சம்
வயங்கி மயங்க வியங்கி முயங்கு மடவார்சொல்

மந்த்ரங் கண்டும் பண்டுங் கொண்டும்
புரிந்து ரவிந்து கறந்து மெலிந்து
மங்கும் பங்கங் கங்கின் றுன்றண்
டையஞ்ச ரணஞ்ச லெனுந்தொனி பொங்க
மன்றந் துன்றின் றென்றன் றுன்பந்
தொலைந்திட விந்தை மிகுந்த பதங்க ளருள்வாயே

அண்டந் தண்கண் டொண்டன் றெண்டந்
தெரிந்தரு ளந்தரி சுந்தரி மைந்த
அன்பென் குஞ்சம் பந்தம் பண்டிங்
ககங்க ரபங்க சிசம்ப ரதுங்க
அம்பென் றுந்தங் குஞ்செங் கஞ்சஞ்
சிறந்தவ ரும்புகழ் கின்றவ வெங்கள் பனையூரா

அங்கங் கெங்குந் தங்கந் தங்குங்
குடம்பு தடங்க ளடர்ந்த மடங்க
ளெங்குந் தங்குன் றஞ்சங் கொண்டெஞ்
சனந்த சனங்க ளகங்க ணினைந்த
தன்றன் றுந்தந் தெங்கும் பொங்கின்
பகண்டி தபண்டி தனென் றெழுகின்ற பெரியோனே.

---

(9) தந்தனந்தாத் தனதன தாத்த
தந்தனந்தாத் தனதனதாத்த
தந்தனந்தாத் தனதனதாத்த—தனதான

அஞ்சனந்திட் டயில்விழி காட்டி
பம்பரம்போற் பணைமுலை காட்டி
அம்புயம்போற் றடியிணை காட்டி மணநாறும்

அங்காரந்தூற் றலர்குழல் காட்டி
சம்பளந்தோற் றிடுமுடல் காட்டி
ஐந்திரங்கேற் றியதுகில் காட்டி ரதிபோலே

கொஞ்சிநின்றாட் டவகைகள் காட்டி
சிந்தூரம்போற் கொவ்வையிதழ் காட்டி
குஞ்சரம்போற் றுணநடை காட்டி மணிபோலே

கொண்டபுன்சீர்க் குறுநகை காட்டி
கங்கணங்காப் பறைமுடி காட்டி
கொந்தனங் காச் ரமவழி காட்டி யணைமாதர்

நெஞ்சிடந்தீட் டியமய லோட்டி
விஞ்சைவிண்மட் டருண்மதி யூட்டி
நின்றனின்பாட் டிசையொடு கேட்டு வருவாயே

நின்றதிர்ந்திட் டிகள்பல நீட்டி
வம்பிடுங்காட் டவுணர்கள் கோட்டி
பின்புறங்காட் டமுடுகி வாட்டு மயில்வேலன்

மஞ்சினங்காத் திரிகொடி நாட்டி
பைம்புனங்காத் திடுகுற வாட்டி
மங்கல்யம்பூட் டிமயிலை யாட்டி விளையாடும்

மன்றகுன்றக் குடியடி யார்க்கு
நன்றிடுஞ்சீர்ப் பனைநகர் கார்க்க
வந்திடுஞ்சேத் திரகுரு மூர்த்தி பெரியோனே.

---

(10) தானனதான தனத்த தத்தன
தானனதான தனத்த தத்தன
தானனதான தனத்த தத்தன—தனதான

ஆசாரவரிச லகத் திருப்பிகள்
காசாசைமீறி விலைக் கணைப்பிக
ளாரேனுமாம னெனப் பசப்பிகள் சதுராடி

ஆடாதமார்பை யசைத்து நிற்பிகள்
பாடாதபாடல் படித்து ருக்கிகள்
ஆபாசமோக மதப் பொறிச்சிக ளிசைவானா

மாசாடைபேசி வருத்து துட்டிகள்
பாவாடைசோர நடக்கு மட்டிகள்
வாடாதகாளை மலர்ச் சடைச்சிகள் துயிலாது

மாருதலீலை கொடுத்து தட்டமு
தூணைகலூரு செனக் குடித்திடு
மாயாவினோத வழிக் குளைப்பது தவிராதோ

பேசாதுபேசி யெதிர்த்த வுக்கிர
சூர்மாளவேலை விடுத்த விக்ரம
பேரானஞான சமர்த்த னற்றிரு வவதாரா

பேய்காளிகூளி பெருத் திரைச்சல்செய்
தோடமதேச வனற்கு ணிற்பவர்
பேதாதிதிருக் கிரத்து ருத்திர வடிவான

வாசமகோசர சித்தி பெற்றுயர்
தேவாமிராம கிரித்த வத்தவர்
மாசீடரான மகத்து வர்க்கொரு புகல்வோனே

வானடர்கூடி மதித்து மெச்சிடு
பூஞாறுமோடைப் பணைத் தலத்திடை
வாழ்தேசிகாசி வசிற்ப்ர மத்வைத பெரியோனே.

---

(11) தானதத்த தானதத்த தானதத்த தானதத்த
தானதத்த தானதத்த—தனதான

ஓலமிட்ட நூபுரப்ப தாரமிச்சி யாதசுத்த
ஆறெழுக்கு மாதருக்கு நிதிதேடி

ஓடியெய்த்த நாயெனட்பை யோர்பொருட்ட தாய்மதித்து
மோதிவைத்த மூமிவழுத்தை மறவேனே

நீலிநிர்க்கு ணயிசத்தி வாலைபத்ரா காளிகொற்றி
நேமுகர்க்க னேகசித்தி தருமாதா

நீடுமுக்ர வீரதத்வ மாரிநற்பி டாரியெற்கு
நீறளித்து வாழவைத்த மகமாயி
சேல்விழித் தடாதகைக் ருபாவருட்ப்ர பாவிரித்த
தேமொழிப் பிராமணத்தி மகிழ்ஞானி
சீதளச்ச ரோருகத்த டாகமற் சமேதுதித்த
சேறினெற் குழாமுளைக்கும் பழனியூரா
மாலரிப்ர மாபரர்க்கு மாலினிக்கு மாசசிக்கு
வாணியிக்கன் மாதினுக்கு மறையோர்கள்
வானவர்க்கு மாணவர்க்கு ஞானிகட்கும் வாழ்வளிக்கு
மாபரப்ர மோதிபெற்ற பெரியோனே.

---

(12) தத்ததத்த தத்ததத்த தத்ததத்த தத்ததத்த
தத்ததத்த தத்ததத்த—தனதான

சித்தசப்பொன் முத்ரைபெற்ற வத்திமத்த கத்தனத்தர்
செப்பினிற் சிரிப்பினட்பின் மயலாகி
சிற்றறைக்கு ளிட்டகட்டின் மெத்தைபிற் படுத்துடுத்த
சித்திரத் துகிற் றிரைத்து முகமீதே
முத்தமிட் டணைத்தழுத்தி விச்செனத் தொனிப்பிறக்க
முட்டிணைப் புயத்தோ டொட்ட மதகாம
முத்திணைக் கொழித்துதட்டி னெச்சிலைக் குடித்துவெட்டை
முற்றிவெப்பி டைக்கடுப்பு சொரிமேகம்
சத்திபித்த முற்றிளைத்த வெட்கமற்ற துட்டமட்டை
தற்புகழ்ச்சி யிற்குதித்த கடைநாயேன்
தர்க்கமற்றொ ருத்தர்சொற்க லக்கமற் றிருக்கநித்த
தத்துவப் பதத்தில் வைத்து னருடாராய்

தத்துமப்பு டைக்குளத்தி லுற்றபுட்கள் புட்பமெத்து
தட்டளிக்களைக் கலைக்கும் பனையூரா
சற்குணத் தவப்ரசித்த விற்பனர்க ளுக்குகித்த
தற்பா ப்ரமத்துதித்த பெரியோனே.

---

(13) தானதான தானதான தானதான தானதான
தானதான தானதான—தன்னதான

எவல்காளி கூளிபூத மாபசாசு பேய்வியாதி
யேதமேம காமகாள பில்லிசூன்ய

மீனதீன மாயைசோர ரோடஞான வாளையேவி
எகபோக மாகவாழு மெல்லைமீதே

தேவமாசில் சோதிவீச வாசமாலை காவியாடை
சீர்கொணீறு பூசுமேவி னெல்லைமேவ

தேசிகாநீ வாவெனுது னேசரோடு கூடிடாது
தேசமீது லாவுபாவி மொல்லைதீர

ஆவலாய தோமுகோதி யோதிமாத வாதவரா
வாரணு பர்ணுகிபாத வில்லையீவாய்

ஆலையாதி தேடனேகர் வாணிமாவு மாமுராரி
ஆரோபர் தேவர்சூழு நல்லராம

மாவிலார் மகாமுனீசர் வாவெனோர் மகானுபாவ
மாமனோல யாசமாதி சொல்லுவோனே

மாகமேக மேதுபூக வாழைமாதெ னீழனீள
மாமைசேரெ னூரிலாரும் பெரியோனே

---

(14) தானத் தானத் தனத்தனந்தன
தானத் தானத் தனத்தனந்தன
தானத் தானத் தனத்தனந்தன—தந்ததான

போர்வைத் தோலைத் தொடச்சிணுங்கிகள்
பாடிப் பாடிப் பகட் டாங்கிகள்
பூவைத் தூவிப் படுத் துறங்கிகள் ரெண்டுஜமம்

பூனைக் காலிப் பருப்புவெந்தய
மாலத் தீவித் தரத்தைக் முந்திரி
பூமுக் காய்சுக் கினிப்பபின்சடை சண்டையேலம்

நேர்வைத் தேசுத் தியிட்டிளக்துணி
மாவைப் போலத் திரித்துமிஞ்சுப
னீரிற் பாகொத் தடுப்பிடங்கிள ருண்டைபாலும்

வீலைக் காலத் தொளித்தருந்திடு
நாசக் காரத் திருட்டுலண்டிகள்
நேசத் தேசுற் றெனக்கிரங்துவ தெந்தநாளோ

போர்வைக் கோலொப் பகட்டிலன்பது
யானைப் பாரப் பொனத்திலங்கவல்
போருக் கேறிப் புறப்படும்பகை கொண்டசூரன்

பூவிற் கூவிப் பதைத்துருண்டிட
வேலிட் டேகுத் திவெட்டியந்தர்
பூசைக் காகத் திருப்பரங்கிரி தங்குநாதன்

நேர்மைச் சீர்பெற் றிருக்குமென்குரு
நாதர்க் கேபுட் பமிட்டியம்புமி
னீள்முத் தேவர்க் குவக்குமென்றளி கொந்துதோறும்

ரீமுற் றுடிக் கடப்பமம்புய
பூவிற் றேனைக் குடித்திரைந்திடு
நீதிப் போதப் பனைத்தலந்திக ழெம்பிரானே.

---

### பனையூர்

## சத்தபங்கி.

தனன தனுதன தானன தானன தானனதானுன
தனதன தானு தனனுதனதன தனதன தனதானு.

அமர சிகாமணி யாறுமுகாவென வாறெழுத் தேவோதும்
அடியர் குழாமே வறிவோர் பதமல ரகமொருதலைசூடி

அமர சிதாசன மேவிய தோமுக மாரதித்தேயாது
மறியுமதீ தோததிசேர் மதியுடன கதிபோன் மலைவேனு

அமர சியானை மினுடக மேல்வள்ளி யாரிடத்தேபோது
மணிசடை வீரே ரிறைவோ ரதிசய வகமுக குகஞான

அமர சியானடை வேனினி மேற்பெரி தாரெனக்கேபோத
மருளெனு மோமா குருவே பிதாததி சுகமளி பனையூரா.

### இதன் பிரிவுக்கவிகள்.

வெண்பா.

(1) ஆறெழுத்தே வோது மடியர்குழா மேவறிவா
ராரிடத்தே போது மணிசடைவீ—ரேரிறைவோர்
ஆரெனக் கேபோத மருளெனுமோ மாகுருவே
ஆரதித் தேயாது மறி.

கட்டளைக்கலித்துறை.

(2) அமரசிகாமணி யாறுமுகாவென வாறெழுத்தே
அமரசிதா சனமேவி யதோமுக மாரதித்தே
அமரசியானை மினுடகமேல் வள்ளி யாரிடத்தே
அமரசி யானடைவே னினிமேற் பெரிதாரெனக்கே

கோச்சகம்.

(3) ஆறெழுத்தேவோது மடியார் குழாமே வறிவா
ஆதித்தே யாது மறியுமதி தோததிசே
ஆரிடத்தே போது மணிசடைவீரே ரிறைவோ
யாரெனக்கே போத மருளெனுமோ மாகுருவே.

சந்தம்.

(4) ஓதுமடியார் குழாமே வறிவார்
யாதுமறியு மதீதோ ததிசேர்
போதுமணி சடைவீரே ரிறைவோர்
போத மருளெனு மோமாகுருவே.

சந்தம்

(5) பதால ரகமொரு தலைசூடி
மதியுட னகதிபோன் மலைவேனே
அதிசய வகமுக குகஞான
இதுகதி சுகமளி பணையூரா.

விருத்தம்.

(6) அகமொரு தலை சூடி
அகதிபோன் மலைவேனே
அகமுக குகஞான
சுகமளி பணையூரா

விருத்தம்.

(7) ஆறெழுத்தே
ஆதித்தே
ஆரிடத்தே
யாரெனக்கே.

---

# ஸ்ரீ தெச்சிணாமூர்த்தி சுவாமிகள்

## பதிகம்.

### ஆசிரிய விருத்தம்

(1) அறிவதற் கரிதா யகண்டமாம் நிர்க்குண
வதோமுக பராபரத்தை
ஆனந்த மோனத்தை யாருவிளக் கையொளி
வார்ந்ததே சோமயத்தை
குறிகுண மிறந்தமங் களமான வஸ்துவைக்
கோமளப் பெரிய பொருளைக்
கூடஸ்த பிரமமாய்க் கோணாகி வருகின்ற
குறைவில் சைதன்ய வாழ்வை
அரியயன ரக்குமான் மாவான சோதியை
அநாத்திய மிலாநிசத்தை
ஆதியா யுபநிஷத் தறைகின்ற பேரின்பை
யளவிலா வெட்டவெளியை
நறுமனத் திலகுசிற் சுகமான மோட்சமதை
நல்குபனை யூரினர்சே
நற்சுரரு மெச்சவரு தெச்சிணா மூர்த்தியே
ஞானவடிவான குருவே

(2) ஆழிசூ ழுலகிலே பாழிலே மலையாம
லருகுவைத் தருள்புரியவும்
அட்டமா சித்தியொடு நிட்டைநிலை யுதவுகா
ளர்ச்சியென் றருள்புரியவும்
வாழியென் றனதடியை வழுவா துரைக்கவருள்
வாக்கெனக் கருள்புரியவும்
வம்புத் தனத்தியர்கண் வம்பைத்த விர்த்துவரு
மார்க்கத்தை யருள்புரியவும்

கேழிருந் தொழுகுனது கிருபானு பூதியே
கிட்டவந் தருள்புரியவும் [ண்டு
கிரகநோய்ப் பகையொழிய வெழின்மொழிய விழிகொ
கிழமைவாய்ந் தருள்புரியவும்
நாழிகைக் கேனுயான் மறவா திருக்கவும்
நாடுபனை யூரின்வாழ்வே
நற்சாரு மெச்சிவரு தெச்சிணு மூர்த்தியே
ஞானவடி வானகுருவே.

(3) யானென தெனுங்குண மருயா னுனைக்காண
யாதடைவ தெந்த நாளோ
யாழ்முரசு துடிசங்கு முழவோசை யெழுவழியை
யாத்தடைவ தெந்தநாளோ
வானெனவு மெண்ணுத மாசோதி வீசநான்
மருவுநா ளெந்த நாளோ
வற்ருத பேரின்ப வாரியுண் மூழ்கிநான்
மகிழுநா ளெந்த நாளோ
தேனினு மினிக்குமதி யமிழ்துண்டு பசியைச்
சிதைக்கும்நா ளெந்த நாளோ
சிந்தை தடுமாருது வந்திபக லுன்னையே
சிந்திப்ப தெந்த நாளோ
நானென்ன செய்குவே னிதுவேனை வரவேண்டும்
நல்லபனை யூரின்வாழ்வே
நற்சாரு மெச்சவரு தெச்சிணு மூர்த்தி
ஞானவடி வானகுருவே.

(4) எண்சாண் பனைக்கள் ளிறக்கியுண் ணுதுபனை
யினிகள்ளை வேட்டபாவி
ஈடிலாப் பேரின்ப மெண்ணுது சிற்றின்ப
மெண்ணித் துவண்டபாவி

கண்ணான நெற்றியின் கண்மூடி யூனமாங்
கண்கொண் டலைந்தபாவி
காட்சியா முன்விழாக் காட்சிகா ணாதுகண்
காட்சியில் மகிழ்ந்தபாவி
பண்ணான நின்புகழ்கள் பாடாது நாடகப்
பண்பாடி நின்றபாவி
பண்டான நின்றவப் பண்டுசேர்க் காதிகப்
பண்டங்கள் சேர்த்தபாவி
நண்டளந் திடுநாழி போலான பாவிமுகம்
நாடுபணி யூரின்வாழ்வே
நற்சாரு மெச்சவரு தெச்சிணா மூர்த்தியே
ஞானவடி வானகுருவே

(5) பெண்டு பிள்ளைகளென்ற பேய்பிடித் தாடுமிப்
பிரமைக்கு நானழுவனோ
பேசாத மந்திரம தேசாத தால்வந்த
பிறவிக்கு நானழுவனோ
மண்டுக மொத்தபுத் தியனுடலை நானென்னு
மடமைகட் கேயழுவனோ
வாராத துயரெலாம் வருவிக்கு மனமான
மந்திக்குநா னழுவனோ
கண்டுகண் டுலகாசை யுறவாசை நீங்காத
கடையனே னென்றழுவனோ
காவடிக ளிற்சார்ந்து பூவடியை யோதன்பு
கண்டிலேமென் றழுவனோ
நண்டுலா வளநாட நானெதற் கென்றழுவ
னல்குபணி யூரின்வாழ்வே
நற்சாரு மெச்சவரு தெச்சிணா மூர்த்தியே
ஞானவடி வானகுருவே.

(6) மைந்தனழு வதுகண்டு மாதா வெடுத்தினிய
வார்த்தையா டித்தனப்பால்
வைத்துச் சிமோந்தசைத் தமிழ்தீந் திசைந்துள்ள
மகிழவளர் வித்திடுதலே
எந்தநாட் டினுமுள வறிந்துளீ ரேழையேன்
எப்போதுமுமை நினைத்தே
இரவுபக லாய்ப்புகழ்ந் தோதியர்ச் சித்துமன
மேங்கிநொந் தழுதுமோர்கால்
அந்தோ வருந்துவது பார்த்து மாரோவென்
றறிந்திடார் போலிருந்தால்
அடிமையென் சேய்குவே னெங்குபோ வேனெனக்
காதார மேதுமில்லை
நைந்திடா தெனதருகில் மைந்தவா வெனவருள்க
நங்கள்பனை யூரின்வாழ்வே
நற்சூரு மெச்சவரு தெச்சிணு மூர்த்தியே
ஞானவடிவா னகுருவே.

(7) நல்லவர்க ளுறவுவேண் டுங்கொடிய பாவிகளை
நாடாதிருக்க வேண்டும்
ஞானமோனச் செல்வம் வேண்டுமெப் போதுமுன்
நடனவொளி காணவேண்டும்
கல்விவல் லமைவேண்டு மோதுநல் விசயமே
கைக்கொண் டிருக்கவேண்டும்
கஞ்சா வபின்றின்று நெஞ்சுபுண் ணுகாது
கதிமருந்தரு ளல்வேண்டும்
மல்லலே வேண்டுமலை பல்லுயிரு மொன்றென்றல்
மறவாதி ருக்கவேண்டும்
மமதையற வேண்டுமுன் சமுகம்வர வேண்டுமென்
மனதினீ வாழவேண்டும்

நல்குமடி யார்திருத் துணைவேண்டு முனிவிலார்
நத்துபனை யூரின்வாழ்வே
நற்சுரு மெச்சவரு தெச்சிண மூர்த்தியே
ஞானவடி வானகுருவே.

(8) உலகெலா மோர்குடையி லாளரச னேனும்வான்
வோங்குகோ நிகர்வரேனும்
ஊக்கமொடு போரிலே ஜெயவாகை சூடுமோ
ருரவீர ரானபோதும்
பலமான யானைபுலி சிங்கக் குழாத்தூடு
பாய்ந்துவரு கொலைஞனெனினும்
பற்பலபு ராணமோ டிலக்கண மிலக்கியம்
பார்த்தகவி ராஜனெனினும்
குலமேவு யர்ந்திடி னு மலகிலா நின்னருட்
குணவடிவை யோர்கணமெனும்
கூடாதி ருப்பரே லோர்திரண மாயெனார்
கொல்லோநி னன்பர்மகிமை
நலியாது வந்தவர்கள் கலிகண்ட மைந்துதொழு
நன்மைசால் பனையூர்வாழ்வே
நற்சுரு மெச்சவரு தெச்சிண மூர்த்தியே
ஞானவடிவா னகுருவே.

(9) என்றுமுன் பொன்னடியை யெண்ணித் தியானிக்க
வேழையேற் காவலப்பா
இகபரச் சுகமுற்று மிணையிலா ஞானசுக
மெய்தவெற் காவலையா
சென்றலைந் தலையா திருந்தபடி யேயுனை
சேவிக்க வாலராசே
சிவனரியு மொன்றென்று தவமுயன் றென்னையான்
றெரிவதற் காவலிறையே

பொன்றலப் பொருளுமண் பொருளுமொன் றெனவெண்
புத்தியெற் காவதுரையே [ணு

பொல்லதிது நல்லதிது வென்றெணு வவிரோதம்
பூணவெற் காவன்முதியா

நன்றவம கான்களைச் சார்ந்திடவு மாவலாய்
நாடினேன்பனை யூர்வாழ்வே

நற்சாரு மெச்சவரு தெச்சிணு மூர்த்தியே
ஞானவடி வானகுருவே.

(10) முட்டா ளெனப்பே ரெடுக்கா துனடிசேர
முடிவருள்வ துங்கடமையாம்

மோகப்ர வாகத்து ளாகத்தை யழியாது
முள்ளிற்ப துங்கடமையாம்

செட்டாய் பிழைத்துமாண் டிட்டால் வராதெனத்
தெரிவிப்ப துங்கடமையாம்

சீவகா ருண்யமற வாதுயான் கதிபெறச்
செய்விப்ப துங்கடமையாம்

கெட்டாலு மேன்மக்கள் செய்கின்ற நிட்டைதிலை
கிட்டவா லுங்கடமையாம்

கிருபானு பூதியே தருபானு வெளியெனுட்
கிரகிப்ப துங்கடமையாம்

நட்டார் தனக்கருள்செய் சிட்டாவெ னன்புபூண்
நம்பினேன் பனையூர்வாழ்வே

நற்சாரு மெச்சவரு தெச்சிணு மூர்த்தியே
ஞானவடி வானகுருவே.

---

## இலிங்கமாலை.

(1) ஆதிமத்யாந்த வகண்டித லிங்கம்
ஆனந்தத் தாண்டவ மாடியலிங்கம்
சோதிசொரூப சுராலய லிங்கம்
சுந்தரஞான சிதம்பர லிங்கம்

(2) பாதிமதிநதி போதணி லிங்கம்
பார்பதிபாக பராபர லிங்கம்
வேதவதீத விதேகவி லிங்கம்
வெங்கலிதீர விளங்குமி லிங்கம்

(3) மாலயன் காணொணு மாதவலிங்கம்
வானுல கும்புகழ் மாமகாலிங்கம்
காலனை மாய்த்தகழற் சிவலிங்கம்
காமனைவென்ற கபாலக்கை லிங்கம்

(4) சதுர்மறைதந்த சதாசிவ லிங்கம்
சத்தியநித்ய சகத்ரய லிங்கம்
அதுவிதெ ஞதவ தோமுகலிங்கம்
அம்பலமாடிய சம்ரம லிங்கம்

(5) தத்வவிசார சுபோதனர் லிங்கம்
சற்குரு வாய்வரு தற்பரலிங்கம்
மித்தை விபாவ விமோசனலிங்கம்
மிச்சையொ ளித்த விரட்சகலிங்கம்

(6) ஆலமுண்டும்பரை யாட்கொண்ட லிங்கம்
ஆலின்கீழ் நால்வருக் கருளியலிங்கம்
லீலையாஞாலம் நிரூபித்த லிங்கம்
நீநானெனுத நிசானந்த லிங்கம்

(7) பற்பமணிந்த பரஞ்சுடர் லிங்கம்
பாசுரர்தந்த கைலாச லிலிங்கம்

அற்புத பொற்பத வத்வைதலிங்கம்
அன்பரு ளன்பாய டங்கியலிங்கம்

(8) ஆனையுரித்துடுத் தக்கினி லிங்கம்
அர்ச்சுனர்க் கத்திர மன்றருள்லிங்கம்
மான்மழுசூல மமர்ந்தகை லிங்கம்
மன்னிய வெண்விடை முன்வளர்லிங்கம்

(9) சீர்தரு தென்பனை யூர்வருலிங்கம்
தெச்சிணாமூர்த்தி திருத்துணை லிங்கம்
தார்பொருராம கிரீஸ்வரர் லிங்கம்
சங்கரநாரண வென்குரு லிங்கம்

(10) குணமதிமோட்ச கோடீஸ்வர லிங்கம்
கூவிளங்கொன்றை கொளுந்தனி லிங்கம்
கணபதிபோற்றிசெய் காருண்ய லிங்கம்
காரணசங்கர நாரண லிங்கம்.

---

## கீர்த்தனைகள்.

கடம்பகந்த னென்ற மெட்டு.

கண்ணிகள்.

(1) தகப்பன் தாயாய் சகல சீவர்க்கும்
சலியாமற் படியளக்கும்
தச்சிணா மூர்த்தியின் சேத்ரம்-வருவார்கடப்பார்
சனனமாண சமுத்ரம் ஒரு
சாரமற்றசமு சாரபற்றெறுடுவி
சாரமுற்றுமத சார்விற்றுவழும்
சஞ்சலங் கொஞ்ச நஞ்சமா-எமன்தண்டாலே
தாக்கும்போதா ருந்தஞ்சமா

(2) மூச்சுப் போனலொரு பேச்சுக்கு மாகாப்
பிச்சுக்குழலை நம்பி

மோசம்போகுவ தாகுமா-நம்முன்னோர்சொன்ன
முறைகள் பிசகிப் போகுமா இந்த

மோசக்காரவுல காசைக்காரரொடு
பேசிக்காலமெலாங் காசுக்கே திரிந்தால்

மோட்சவீ டெப்படிக் கெட்டும்-சற்குருநாதன்
மொழிந்ததை நம்பினற் கிட்டும் (த)

(3) மோக மறச்சிவ யோக வருட்சின்
முத்திரை பெற்ற மகான்

மூவுலகோதும் புண்ணியன்-என்னெண்ணப்படி-
முடித்து வைத்திடுங் கண்ணியன் பிர

மோதிகந்தறிவு மோதிவெந்துயரை
மோதி வந்தருண மோதினந் தினமென்

மூமூட்சுளத் தாமரையிற் றுயில்வான்-நிட்களாதீத
முத்தாய்த் துரியத்தி னடம்பயில்வான் (த)

(4) சங்கு முளங்கும் பணைசூழ் பனையூர்
சங்கா நாராயணா

தவசியளித்த சன்யாசி-அகத்தியமுனி
தன்மரபா ருபன்யாசி பாரி

சாதகந்தபிர சாதகந்தரும
சாதகந்தருக்கு சாதகந்தையறு

சச்சிதானந்தா நமஸ்து-என்றுங்கணபதியே
சாற்றும் பிரமர் னந்தவஸ்து (த)

ஐயாபழனிமலை யென்ற மெட்டு.

பல்லவி.

அப்பா பனையூர்க் குருநாதா என்னை
யாள்வ தென்னாள் சொல் லொண்ணாதா (என்)

அநுபல்லவி

(1) முப்பாழ் கடந்த வுபன்யாசி திரி
மூர்த்திகளும் புகழ் சன்யாசி
முச்சுடரே பார்த்து வுச்சிவெளி கோர்த்து
மிச்சைவினை தீர்த்த தெச்சிணா மூர்த்தி (என்)

(2) செப்ப முடியா தெந்தன் துன்பம் நான்
சிறுவனெனன் மேலென்ன வம்பம்
சிந்தை பலவாறு நொந்து தடுமாறு
மெந்த னிடையூறு சிந்தவருள் கூறு (என்

(3) எப்போ திரங்குமோவுன் நெஞ்சம் என்னை
என்றுவிட் டொழியுமோ பஞ்சம்
இன்ப நிலைதேட வன்பர் பணிநாட
உன்பத மேகூட வென்புரு கிப்பாட (என்)

(4) காப்ப துனதுகட னையா கவி
கணபதி போற்றிசெய் மெய்யா
கற்பக மும்நீயே இப்போ திசைவாயே
நற்பா மர்சேயே சுப்ர மணியாயே. (என்)

---

நெஞ்சே சம்சாரம் - என்ற மெட்டு.

பல்லவி.

பார்த்தா லகலும் பாவமே
பனையூர்ப் பதித் தீவமே. (பார்)

அநுபல்லவி.

(1) ஊர்க்குளும் வானிலு மணக்குங் குங்கிலியம்
ஒருதரங் கண்டால் விடுமனச் சல்யம்
தீர்க்காயு ளுந்தருஞ் சென்ம சாபல்யம்
தினந் தொழுவார்க்குவி தேககை வல்யம் (பா)

(2) ஆர்க்கார் துணையல காசையைப் போக்கும்
அந்தகன் வரும்பொழு தருடலை காக்கும்
சேர்க்கைப் பிசகற த்யானிக்க நோக்கும்
தெச்சிணு மூர்த்திசீர் தெரியுமெல் லோர்க்கும் (பா)

(3) அப்பம் முப்பழம்பா கமுதம்நை வேத்யம்
அண்டமுங் குலுங்கிட வதிரும்பல் வாத்யம்
செப்புவ ரடியர்சங் கீத சாகித்யம்
சித்தர் பிரான் வருஞ்சிறப்போ வசாத்யம் (பா)

(4) கோடிகோடியாய்ச்சனங் கூடிக் கொண்டாடும்
கோயிலி லட்ட லெட்சுமி விளையாடும்
நாடிடுங் கணபதி நவில் கவிசூடும்
நாதனைக் காணமெஞ் ஞானங்கை கூடும் (பா)

---

இராகம்-தேசிகதோடி—தாளம்-அதி.

பல்லவி

என்னையென்ன செய்வானோ நானறியேனே
எல்லாம் வல்லபனையூ ரெம்பெருமானே (என்)

அநுபல்லவி

(1) மின்னும் பிரமஞான வேதாந்த முத்தியெனும்
வெட்டவெளிசேரச் செய்வானோ-அல்லதுநெருப்
பிட்டநாகேறச் செய்வானோ எம்பெருமான் (என்)

(2) பண்டம்பொருள் பெண்டுகளை மண்டையுள்ள மட்டுந்தேடி
பசாசாகி மாளச் செய்வானோ—அல்லதுலகில்
உசாராகி வாழச் செய்வானோ எம்பெருமான் (என்)

(3) பாரிடிந்தா காயமெங்கும் பற்றியெரிந் தாலுமஞ்சாப்
பத்திநெறிமேவச் செய்வானோ—அல்லதெமன்
லத்திற்கிறையாகச் செய்வானோ எம்பெருமான் (என்)

(4) சஞ்சலப் படாதேயென்று நெஞ்சைத் தடவிக்கொடு
தண்ணமுத மூட்டிடுவானோ—அல்லதொருகை
மண்ணையள்ளிப் போட்டிடுவானோ எம்பெருமான் (என்)

(5) ஆதிமத் தியாந்தசிவ சோதிமயந் தானேயென
அச்சமறவெண்ணச் செய்வானோ—அல்லதலைந்து
பிச்சையெடுத் துண்ணச்செய்வானோ எம்பெருமான் (என்)

(6) அன்புடன் கணபதிசொல் செந்தமிழ ணிந்துபோத
மாவலுடன் விள்ளுவானோ—அல்லது யென்னைப்
பாவியென்று தள்ளுவானோ எம்பெருமான் (என்)

---

அள்ளியள்ளி யென்றமெட்டு

கண்ணிகள்.

பல்லவி

(1) ஓயாம லென்மனத்தை நீயேன் வருத்துறாய்
ஓதும்பனையூர் நாதனே மலர்ப்பாதனே
ஓதும்பனையூர் நாதனே-தூய

அநுபல்லவி

ருள்ருதோறுமெ னுள்ள மீதனல்
கொள்ளுதே யருள் வெள்ளமே பொழி (ஓயா)

பல்லவி

(2) சொல்லச் சொல்லக் கேளாமல் சும்மாயிருப்பதுன்
தூயதன்மைக்கு ஞாயமோ ஈதுபாயமோ (தூய

அநுபல்லவி

வர-துங்காரமபி றங்கலா ரருள்
சங்கரானந்தர் தங்குமாரனே (சொல்)

---

பல்லவி

(3) காயாமரம் போலநான் காசினியில் வாடுறேன்
கருணைமழையே பெய்குவாய் அருள்செய்குவாய்

அநுபல்லவி

சிவ-காருண் யாரூப லாவண் யாதவ
மாபுண்யா வாசுப் பிரமண்யா வருள் (காயா)

பல்லவி

(4) காணவேணு மென்றுபட்ட கட்டங்களைச் சொல்லினோ
கல்லுங்கரைந்து போகுமே மாமேகுமே(கல்)

அநுபல்லவி

கெட்ட-காசுபணத்தி லாசைவைத்துனை
நேசித்தேனென யோசித்திடாதே (காண)

பல்லவி

(5) சியம்புலி கமுகில் சோர்ந்துவிளையாடிடும்
தென்னாடு சூழ்த்தேடினேன் கவிபாடினேன் (தெ)

அநுபல்லவி

இன்னம்-நீதரூபிர சாதமேதர
வாதுசெய்வது நீதமல்லவே (சியம்)

பல்லவி

(6) கொஞ்சுங்கிளி மொழியார் கூடிநடமாடிடும்
குன்றக்குடியில் வாசனும் கவிராசனும் (குன்)

அநுபல்லவி

நல்ல-குணமதிகண பதிதுதிபா
கதியதிபதி பணபதி நிதி (கொஞ்)

அஞ்சவேண்டா மென்ற மெட்டு

பல்லவி

கோபங் கொள்ளாதே நெஞ்சே ஒரு
கோடிநமஸ்கார மோடிவா யென்னோம் (கோ)

அநுபல்லவி

(1) கோபுரத்தைப் பார்த்து நாய்குலைப் பதைப்போல்
பாவிகள் நம்மையே பார்த்தென்ன வைதாலும் (கோ

(2) சாதுசங்க மென்ற தன்மை யறியாத
பாதகர் செய்யும் பரிகாசங் கட்குநீ (கோ

(3) நிட்டை புரிந்திடு நேர்மை யறியாத
துட்டர்கள் செய்யுந்தூர்ச் சேட்டையை கண்டுநீ (கோ

(4) ஆடகச் செம்பொ னருட்சபை காணாத
மூடர்கள் பேசும் முரண்மொழிக் காகநீ (கோ

(5) நல்லோர் பெரியோரை நாடிப் பிழைத்திடாப்
புல்லர்கள் சொல்லும் புரட்டுருட் டுக்குநீ (கோ

(6) நம்ப னடியார்க்கோர் நாளு மன்னமிடா
வம்பர்கள் காட்டு மகங்காரத் திற்குநீ (கோ

(7) தஞ்ச மென்றேதரு தச்சிண மூர்த்தியை
நெஞ்சி னினையாத வஞ்சகர் வாய்க்குநீ (கோ

(8) அன்பன் கணபதி யின்பாவணி பிரான்
தன்பகை வாரவ ருன்பகைவ ரென்றும் (கோ

சரிசரி யென்ற மெட்டு.

பல்லவி

பயமென்ன பாவிநெஞ்செ வுனக்கு (பய)

அநுபல்லவி

பனையூர்க்கொரு வினைதீர்த்திடுந்
தனிவேற்குரு பாணிருக்கவே (பய)

சரணம்

(1) பலபலென்று விடியுமுன்புபோய்ப் பாடுபட்டுத் தேடியே
சிலபசிக்குஞ் சிலவேசிக்குஞ் சிலவுசெய்து வாடியே
தினந்தினம்—பாழில்—வருந்தினம்—இந்தப்
பரிதாபத்தைப் பறித்தினிச்சர்வ
பரிபூரண பாப்ரமத்துறப் (பய)

(2) பழிபவந் தொலைந்த தொண்டர் பாணிதமலைந்துமே
சுழிமுனைப்ர காசவின்ப சோதியுட் கலந்துமே
சுயமதாய்த்—தான்சின்—மயமதாய்—மோன
துரியாதீத சொருபமா நமக்
கெமனேதுமன் மதனே தென்றறி (பய)

(3) வலியதீச்சு வாலைப்பேச்சி மகனைப்பேயுந் தீண்டுமோ
பலுதுமீன்குஞ்சுக்கு நீச்சுப்பழகிக் கொடுக்க வேண்டுமோ
பகவனை—வேண்டி—மிகநினை—நாளும்
பரிவாய்வினை பறந்திடு மிந்தத்
திரிலோகமுந் திணமநுய்நினை (பய)

(4) உலகெலாம் பொய்யுறவெலாம்பொய் யுடலும்பொய் என்றெண்ணுவாய்
கலகமான வாழ்வுந்தாழ்வுங் கனவெனநீ நண்ணுவாய்
கலங்கிடா—தென்னே—டிலங்கிடாய்—தினங்
கவிபாடிடுங் கணபதிக்கருள்
தவஞானிசந் தயவிருக்கையில் (பய)

இந்த உடலை நம்பி என்றமெட்டு.

கண்ணிகள்

(1) மண்பொன் பெண்ணை நினைந்து மயங்கலாமா
கண்முன் யமனிருக்கக் கலங்கலாமா
மன்னிதி நிகர்சீரும் தன்மகவுறவோரும்
வன்னமன் வருங்கால மென்னதுணை (மண்)

(2) மனத்தினைத்த தெல்லாம் வலியவரும்
வனத்திலிருந்தாலுமேல் வலிமைதரும்
வானாட்சியுங் கையிலாந் தானுய்ச்செபஞ்செய்யலாம்
மீனாட்சி மகனோடும் விளையாடலாம் (மண்)

(3) நண்பீர் பனையூரப்பன் ரகசியமே
அன்பாயறிய வேண்டு மவசியமே
நாறுமுடலை நம்பி தாறுமாறேகிழும்பி
வீரமாய்த் திரிவதில் சாரமில்லை (மண்)

(4) நமக்குமுன்னே யெல்லா மெங்கு போனார்
தமக்கெனத் தேடித்தேடித் தங்கு வோனார்
தங்கமுங் கிரகமுந் துங்கமுந் துரகமும்
கங்கை மேலெழுக் தெனக் காண்கிலீரே (மண்)

(5) பணமிருந்தா லெல்லாச் சனமு மண்டும்
பணமில்லை யானாலோ பிணமுஞ் சுண்டும்
பன்னருட் பெருமானை என்னுள்ளே வருவானை
பணியும் புண்ணிய நாளைப் பறிகொடுத்தே (மண்)

(6) பஞ்சாட்சர தியானம் பண்ணுவோமே
நெஞ்சை நிலைநிறுத்த நண்ணுவோமே
நீறணிந்தே ஜீவ காருண்யமா யோகம்
பாருங் கணபதி செந்தமிழ் முழங்கும் (மண்)

---

இராகம்-கவாய்-தாளம்--ஆதி

பல்லவி

அரிசி வாங்கலையா—குருவை
அரிசி வாங்கலையா

அநுபல்லவி

அரிசிவாயெனு மச்சரத்தாலே
வுருசியுள்ள வமுதூறு மேலே (அரி)

சரணம்.

(1) கரியுரித்த சிவபெருமான் கருவூர்க் கடைக்குப்போனார்
தரிசனஞ்செய்தமரரெல்லாந் தன்னைமறந்த ரிசியானார் (அரி)

(2) வேயரவத்தாற் பசுக்கள் மேய்த்தபிரா னர்ச்சுனர்க்கன்
ருயிரத்தெட் டண்டமெல்லா மடக்கியதன் மேலும்பொங்கும் (அரி)

(3) தொட்டுருசி கண்டவர்கள் சும்மாவிடப் பட்டதல்ல
பட்டினத்தைச் சுற்றிச்சுற்றிப் பார்த்தாலுங் கிடைப்பதல்ல (அரி)

(4) வெந்நீர்க்கும் வேகாதது வெட்டையிலுங் காயாதது
தண்ணீர்க்கும் நனையாதது தந்திரத்தில் சமையாதது (அரி)

(5) தீட்டப்படா தெதிலுந் திரிக்கப்படா தெவர்க்கும்
காட்டப்படா தொன்றினல் களையப்படா திருக்கும் (அரி

(6) ஆக்கப்படா துகையா லறிக்கப்படா தகப்பை
மோக்கப்படாது பஞ்ச மூர்த்தியதாய் விளங்கும் (அரி)

(7) சிவப்பு கருப்புமல்ல செய்யபச்சை மஞ்சளல்ல
வுவப்புவெள்ளை தானுமல்ல ஒன்றிலொன்று கலப்புமல்ல (அரி

(8) சட்டையல்ல குட்டையல்ல தடியல்ல லேசுமல்ல
நெட்டையல்ல லெகுவல்ல நீங்கள்நாங் களுமேயல்ல (அரி)

(9) மண்ணுமல்ல தீயுமல்ல வானுமல்ல வாய்வுமல்ல
தண்ணுமல்ல விரவிமதி தாரகையெவ் வடிவுமல்ல (அரி)

(10) ஆணுமல்ல பெண்ணுமல்ல வலியுமல்ல வொலியுமல்ல
பேணுமகா பெரியோர்கள் பேசாதிருக்கும் நல்ல (அரி)

(11) புதுவிவேகிக் கமையாதது பூர்வமுதல் பழகினோரும்
அதுவிதுவென் றன்றுமின்று மென்றுஞ்சொல்ல முடியாதது (அரி)

(12) நாமரூப மில்லாதது நன்மலரு மணமுமன்ன
சீவகோடி களுக்குள்ளுந் தெரியாமல் தெரியமின்னும் (அரி)

(13) இந்துநாத லுச்சிகண்டு மிருதய கமலத்திலே
சிந்துநிகர் ஜலத்தின்மேலே சிவயோக நித்திரைசெய்யும் (அரி)

(14) பல்லூழி காலமட்டும் பயின்றவர்க்குத் தானேகிட்டும்
வல்லசூரர் சுரர்திக்கெட்டும் வான்வையக மும்புகட்டும் (அரி)

(15) அக்கினியில் வைத்தயிரும் பக்கினியாய் விளங்குதல்போல்
புக்குவரு மடியாரைத்தன் பூர்ணவடி வாக்கிக்கொள்ளும் (அரி)

(16) மிஞ்சிவரு மேமனுக்கு மெவ்வினைக்குங் காமனுக்கும்
அஞ்சன்மி னென்றுநம்மை யாளாக்க வெளியில்வந்த (அரி)

(17) தேன்பொழியுந் தென்பனையூர் தெச்சிணமூர்த்திபாத
நோன்புசெயுங் குன்றக்குடி நவலுங்கணபதி சொல்வேத (அ)

---

அடங்காது என்றமெட்டு

பல்லவி

காணுமல் கலங்குறேனே கனவாகிலும் வாக் (கா)

அநுபல்லவி

1 சேணேதும் பனையூரண்ணல் தெச்சிணமூர்த்தியென்னும்
திவ்யகுருநாதன் வந்தென் சென்னியிலோர்கையைவைத்து

திருக்கணுடவும்-நா-னுருகிப்பாடவும்-வினை
தெரிப்பட் டோடவும்(வாக்கா

2 பாவலரை நிந்தித்தேனே பாதாரஞ் சிந்தித்தேனே
ஆவலுரைத் தலைவித்தேனே அல்லதொன்றை யிம்சித்தேனே
அடங்கள் செய்தேனே—தளிர்-விடுங்காய் கொய்தேனே
அடி-யவரை வைதேனே (வாக்கா

3 நிட்டைநிலை தெரிந்திலனே நீதிதெறி யறிந்திலனே
தொட்டவிட்ட குரையிலனே துச்சமெனத் துறந்திலனே
சோதனைதானே—இந்த-வேதனையேனே-அறி
யாத்தனந் தானே (வாக்கா)

4 எங்கும் நிறைந்தவனை எப்படிவாச் சொல்லா
மங்கேநம் கணபதியென் ருசானும் யோசனையா
லமர்ந்திடுவாரோ-அன்றி-மறந்திடுவாரோ-வாம்
புரிந்திடு வாரோ(வாக்கா

---

இராகம்—நாதநாமகிரியை தாளம்-ஆதி.

பல்லவி

நெஞ்சமிரங்க வில்லையா இந்த
நேமங்குருவே சொல்லையா (நெஞ்)

அநுபல்லவி

மஞ்சுலா ராமகிரி மகா னுபதேசா
வரதசங்க ரானந்த மாதவ நேசா
கெஞ்சுமடியே னுளங்கிளர் பிரகாசா
கிருபா சொரூப கிருதார் தவிசேசா (நெ)

2 தஞ்சமென்றோரை யாளாத் தன்மை நன்றிலையா
சாமிநீயென் வினையைத் தகிப்பது மலையா
அஞ்சலென் றோடிவரு மருளுனக் கிலையா
ஆ நீயிருப்பதும் நானிருப்பதுந் துலையா (நெ)

3 பஞ்சத் தருளாது பின்பருள்தல் சகாயமா
பார்த்தருள்வ துனக்குப் படர்ந்த ஆகாயமா
வஞ்ச மிருப்பதுந் தன்மதிப்புக்கு ஞாயமா
வாழ்த்துநா னெனிலுனக் கெட்டிக் கிசாயமா (நெ)

4 பாதத்தைப் பூசைசெய்யும் பாலன் விரோதியா
பக்தரை சோதனையே பண்ணல் கியாதியா
ஏதந் தீராததென்னே எவர்களு மோதியா
எவரிடமுஞ் சொல்லுவோம் இதுதர்மநீதியா (நெ)

5 அருணகிரியை முன்பு ஆண்டது பொய்யா
ஐயையோ என்னைமட் டுகற்ற லேனையா
கருணைமீ னாட்சியம்பாள் கனிசிறுபையா
கமழ்கடம்பனே பன்னீர் கையனே மெய்பா (நெ)

6 அமரர்பதியும் புகழாதி நன்னயனே
அனுதினம் பழனியூரி லமருண் மயனே
கமாரவெளிச் சுயனே காகர்த்த வியனே
கணபதிபாமா கலைகனிந்தணி புயனே. (நெ)

பாம்பாட்டிச்சித்தர் மெட்டு.

அறிந்தறிந் தாசையொழித் தாடுமயிலே-எங்க
ளாசானின் சன்னதிவந் தாடுமயிலே
ஆடுமயிலே குதித் தாடுமயிலே-அசைந்
தழகாய்ச் சிறகைவிரித் தாடுமயிலே

1 காடுமேடெலாந் திரிந்து கத்தினலும்-பல
கலையுணர்ந் தாசுகவி பாடினலும்
நாடுமதிப்ப தல்லாது நமக்கென்னென்று-தேவ
நாயகனைக் கண்டுபணிந் தாடுமயிலே

2 மெத்தப்பிர சித்திபெற்று விருதுகட்டி-ஏழு
மேதினியு மோர்குடைக்கீ ழாளுமன்னரும்
தொத்திவரு மேமனுக்குத் துடிப்பென்று-லிங்கு
சுகமெவர்க் குண்டுகொலோ சொல்லுமயிலே

3 இறப்பும் பிறப்பும்உடற் கின்றிநமக்கே-என்று
மில்லையென வல்லகுரு சொல்லையறிந்து
பறப்புட னழியாத பரப்பிரம-வெளி
பழகிக் கலந்துவிளை யாடுமயிலே

4 வஞ்சப்புலக் காட்டைய நள் வாளினல்வெட்டி-பூர்வ
வாசனையெ னுங்களைவே ரறப்பிடுங்கி
விஞ்சையெனு வேலிக்குள் விசாரகாவல்-வைத்து
வேதாந்தப் பயிர்ச்சிசெய் தாடுமயிலே

5 சந்திரனி லம்பிகையைச் சார்ந்துபுகழ்வாய்-வல
தபன னுதிக்கையிலே தபசுசெய்வாய்
வுந்திவருஞ் சுழிமுனை யோடும்போது-தானு
யுறங்கி யுறங்காதிருந் தாடுமயிலே

6 ரேசக பூரகத்திலே நிலைமைபெற்று-வாய்வை
நிறுத்திடுங் கும்பகத்தி னின்றுகொண்டு

ஓசைமணி மண்டபத்தி னுள்ளுக்குச்சென்று-அம்மை
யுமையைப் பணிந்தமுதுண் டாடுமயிலே

7 பத்திநெறி யிழிந்தொரு வானந்தவாரி-தனில்
படியாது சித்தவிசி ராந்திபெற்று
முத்தி நெறியறிந்த முமுட்சுமுத்தர்பாற்-சென்று
முகம்பதம் படத்தொழு தாடுமயிலே

8 காணரிய சித்தியெலாங் கைகண்டாலும்-பல
கற்பகோடி காலமுட லிருந்தாலும்
பேணான யனரியாம் பிரமந்தானாய்-சேரப்
பெறுதார் பிறப்பாரென் றாடுமயிலே

9 எந்தேக மென்னதென்னு மிச்சையொழித்து-எல்லா
மிறைவன் செயலெனக்கண் டின்புதுன்பற
சந்தேக விவரீதம்போய்தை லதாமைபோ-னின்று
சதாவுஞ் சமாதிநிலை தங்குமயிலே

10 தங்கமொன்று பணிபலவான வாறுபோ-லீசன்
சகல மதத்தினுக்குஞ் சம்மதப்பட்டார்
பங்கமென வம்புதுன்பு பண்ணிவிடாமல்-ஒரே
பாவனையா யெண்ணிமகிழ்ந் தாடுமயிலே

11 சாதிமத பேதங்களைத் தள்ளியேவிட்டு-எல்லாம்
சடலத்தின் தன்மமென்றுந் தானியாரென்றும்
சூதுலகமேது வென்றுஞ் சூட்சுமான-பிர்ம
சொரூபம்யா தென்றுமறிந் தாடுமயிலே

12 தாயுந்தகப்பனும் போலச் சாம்பசிவனும்-மாலும்
சார்ந்ததறி யாதுசில ஜாலமாந்தர்
வாய்வலிக்க நிந்தைபண்ணி வளக்கடிப்பா-ரவர்
வாழ்வதென்று மில்லையென்றே யாடுமயிலே

13 சத்தியாகிச் சிவமாகி சச்சிதானிந்த-ஞான
சமுத்திரமாய் விளங்குந் தற்சொரூபத்தை
நத்தியுட லாவிபொரு ணற்குருவிற்கே-தந்து
நனவுகனவு கடந் தாடுமயிலே

14 ஆடுமாடு வீடுவாச லாயிரங்கோடி-தேடி
அட்டதிசை யுந்தன்வசமாக்கினாலும்
கூடுவிடும் போதுனது கூடவருவ-திந்தக
குவலயத் துண்டுகொலோ வாடுமயிலே.

15 சோலைக்குள்ளே யேழுமெத்தைப் பங்களாக்கட்டி-அதை
சுத்திவாக் காவல்வைத்து தோழிகள்சூழ
வாலவய தானபெண்ணை வைத்திருந்தாலும்-எமன்
மதித்திடா னென்றுகுறித் தாடுமயிலே

16 ஆகம வேதபுராண மட்டசித்திபு-மைய
னகத்தியர்க் கொப்பிட வறிந்திருந்தாலும்
சாகுமுன்செத்த குருவைச்சார்ந்து நில்லாயே-லெமன்
சந்தியி விழுப்பானென் றாடுமயிலே

17 பித்தனைப்போற் பேயனைப்போற் பிள்ளையைப்போலும்
பிணம்போற் கிடந்திருக்கும் பெரியோரை [சுட்ட
அத்தனரி வேதன்முத லமரெல்லாம்-புகழ்ந்
தானந்தங்கொண் டாடுவரென் றாடுமயிலே

18 ஞானிகண் சிவந்தாலிந்த நானிலமெங்கும்-நீயாய்
நடுங்கிடு மென்றுபயந் தொடுங்கிநின்று
தேனிரையும் பூவெடுத்துத் தினம்போற்றி-தீராச்
சென்மச்சிறை தீர்ந்துவிளை யாடுமயிலே

19 ஆயிரத்தெட் டண்டமுதலாளு மென்னம்மை-சத்தி
யம்பிகையா ளீன்றபனை யூர்க்குருநாதன்
தாயுந்தகப் பனும்போலச் சாதுக்கள்முன்னே-வருந்
தலைவனைச் சரணஞ்செய் தாடுமயிலே

20 மல்லலெல்லா மிகுந்த மயூரகிரியில்-வாழு
மாசிலாவைத்திய முத்துசாமி மைந்தனும்
வல்லமைசேர் நாற்கவியும்பாடும் வித்துவா-னுமை
வரகணபதி முன்னின் றாடுமயிலே.

---

## ஒயிற்கும்மி.

1 கும்மியடித்திடீர் கோதையரே-மயில்
குயிலன்னங்கிளி கூடிடவே
கொந்தாலுயர் சந்தாசலர்
வந்தாரு டந்தாதரி
குருநாதன் திருக் கோயில்முன்னே

2 சித்திரை மாதந் திருவிழாவாம் நம்மள்
தெச்சிணாமூர்த்தி குருமணிக்கு
தினமாசுக னனைமாசுக
மனமாசுக மனுமாசுக
தென்பனை யூர்வளர் தேமொழிகாள்

3 அல்லும் பகலு மகநிலையேநிலை
யாக நிற்குஞ்சிவ யோகசித்தர்
அடியாருட னடியாதக
மடியாலுயிர் மடியாதரு
ளானந்தந் தேடுவீர் பைந்தொடிகாள்

4 காலாலே மூலக் கனலெழுப்பி நெற்றிக்
கண்டிறந் தானந்தங் கொண்டுறங்குங்
கதிகாணவே கதியாதவ
கதியாவது மதியேபல
கற்றுணர் நற்றுணைச் சேக்கையரே

5 சந்தம் புனுகு சவ்வாதகில் குங்குமச்
சார்ந்து மெந்தைபதஞ் சாற்றிடுவீர்
சங்கம்பிர சங்கம்புரி
சங்கம்பிர சங்கம்புரி
தங்கும் பனைசைக் கனங்குழைகாள்

6 முல்லை மருகல்வி மல்லிகை கொண்டிடீர்
மூமலந்தீரப் புலோமசையே
முத்தத்தனை முத்தத்தனி
முத்தத்தினை முத்தத்தினில்
மொய்த்தொளிர் தென்பனை யூரனங்காள்

7 கைவசமுத்தி கலந்திடும் வாயுவைக்
கட்டி முறுக்கிக் கபால மெய்தல்
கடினந்தொழுங் கடினந்திகழ்
கடிநந்தலர் கடினந்துரை
காலையே சுந்தர வாலைப்பெண்காள்

8 காமன் சலாமிடுங் கற்புடை யீர்கதி
காணவேணு மென்னிற் பேணுவீரே
கணபதியொடு கணபதிமகிழ்
கணபதிபுகழ் கணபதிகழுங்
காத்திடுந் தெச்சிணு மூர்த்தியையே

---

## வளையற்சிந்து மெட்டு.

1 திருவளருந் தென்பனையூர்க்
குருவருளை நாடு-தினந்
தெய்வத்துதி பாடு-அருட்
சைவமேகொண் டாடு-நெஞ்சே
தேடிவைத்த திரவியஞ் செத்தால் வாராதுன்னோடு

2 சிரித்துருக்குந் தேமொழியார்
செய்தகாமப் பித்தம்-கொண்டு
தேகத்திலி ரத்தம்-கெட்டுத்
திகைத்திளைத்து நித்தம்-சொரி
சிரங்குகொண்டு குரங்குபோலத் திரிவதோ பிரார்த்தம்

3 காமனுக்கு மேமனுக்கும்
கலங்கிடாத மோட்சம்-பெறக்
கட்டுமுருத் ராட்சம்-வெண்ணீ
றிட்டிடக்க டாட்சம்-தரும்
காலபேதங் கடந்துநின்ற கடவுளும் பிரத்யட்சம்

4 சிறுவயதிற் றுறவடைந்த
தீவிரமெஞ் ஞானி-தவ
சித்தியிற்பிர தானி-பிர
சித்திபெற்ற மோனி-நம்மள்
தெச்சிணுமூர்த்தி நிற்குஞ் செயலதை நிதானி

5 சஞ்சலத்தா னெஞ்சுருகித்
தனியே வெகு துலையே-சென்று
சம்பாதித்தேன் மலையே-போலத்
தருமன் வந்தாற் கொலையே-செய்வன்
சருகரித்துங் கூதற்காயத் தருணங் கிடைக்கலையே

6 ஆசையெனுஞ் ——— சுழலிலே வீழ்ந்
தவதிப்படும் பேயே-வுனக்
கார் துணை சொல் வாயே—பல
வண்ட மீன்ற சேயே—வென
வகமதிலே மிகநினைந்தாற் சுகமடைவாய் நீயே

7 தன்னைத்தா னறிந்தவர்க்கு
சகலவாழ்வுந் துச்சம்-வீணே
சலிப்ப தென்ன மிச்சம்-இந்தச்
சகமெலாம் புன் னெச்சம்-என்று
தள்ளிவிட்டுவினைப் பொதிமேற்கொள் ளிவையேனச்சம்

8 குன்றைநகர்க் கணபதிசொல்
குருவைச் சதா போற்று-கொடுங்
குணங்களெல்லா மாற்று-பரன்
குரைகழற்கன் பேற்று-கிலர்
கோடிபடித்தாலு மில்லை வீடெனப் பறைசாற்று

---

## கும்மி.

1 கும்மியடி பெண்காள் கும்மியடி—மலர்க்
கொண்டை குலுங்கவே கும்மியடி
கம்மலிலங்கச் சிலம்பலம் பப்பாடிக்
கைவீசிக் கும்மி யடியுங்கடி.

2 முப்பழமிக்கவல் சர்க்கரை தேன்பொறி
மோதகம் பாலிள நீர்படைத்து

செப்பிணை யங்குயத் தேவிதனையனைச்
சேவித்துக் கும்மி யடியுங்கடி

3 சந்திரசூரியர் மாண்டாலு மாளாத்
தவசிகள் குழாஞ் சூழ்ந்திருக்கும்
கந்தரமிக்க பழனியூ ராண்டவன்
காணக் கும்மி யடியுங்கடி

4 இந்திராதிதேவ ரெண்ணில ரோதுமெம்
மிறைவர் நந்தியூர் வாரளித்த
கந்தாவதாரப் பழனியூ ரெந்தையைக்
கருதிக் கும்மி யடியுங்கடி

5 சத்திவே லேட்ட சூரத்தளத்தையொரு
சணத்திலே சாம்ப ருக்கியநம்
கத்தன்பழனியூரான் றெச்சிணா மூர்த்தியாங்
கடவுள் கும்மி யடியுங்கடி

6 அன்றுபுலோ மசன்பெற்ற விந்த்ராணிதன்
ஐராவதத்தால் வளர்க்கப் பெற்றாள்
மன்றமிடும் பழனியூரான் தண்டபாணி
வரதன் கும்மி யடியுங்கடி

7 தெள்ளுந் தினைமாவுந் தேனும்பிசைந்தாமே
தின்னுந் தின்னுமென் றுபசரித்த
வள்ளியும் வேட்ட பழனியூர்வள்ளலை
வணங்கிக் கும்மி யடியுங்கடி

8 ஒப்பிலாஞானி திருப்புகழ் பாடிய
வப்ப னருணகிரிப் பெருமான்
சுப்ரமண் யாவெனத் தேன்றும்பழனியூரின்
துரையின் கும்மி யடியுங்கடி

9 பத்தரு முத்தரும் பாவலரும்புகழ்
பகவன் ப்ரகலா தாழ்வாரின்

சித்தன் மருகன் பனையூரிற்றோன்றிய
தேசிகன் கும்மி யடியுங்கடி

10 அன்பர்நினைத்தவை யக்கண மீயவே
யங்கை பனிரெண்டுஞ் சென்னியாறு
மின்னமயிலேறு வேலன் பனையூரான்
மெஞ்ஞானக் கும்மி யடியுங்கடி

11 இச்சையில்லாமலே பிச்சை யெடுத்துண்பா
ரிருக்கு மூர்சென் றங்ஙனேநின்று
மெச்சிவிளையாடு மெய்யன் பனையூரை
வியந்து கும்மி யடியுங்கடி

12 கச்சடங் காதினு மட்டுப்படாதெனக்
கதித்துப் புரப்பட்ட தனத்தீர்
வுச்சிவெளியி லுணர்மின் பனையூரா
னுண்மையே கும்மி யடியுங்கடி.

13 பச்சைமரத்திலே ரெண்டு பச்சியுண்டு
பாரொரு பச்சியீ தென்னதென்ன
வச்சமறவொரு பச்சிசும்மா விருந்
தறியுங் கும்மி யடியுங்கடி

14 எட்டிரண்டும் பத்திலேற்றி யிரக்கியு
மிடை யிடையொன்று மூன்றான
வட்டத்தைத் தாபிக்கவல்லீர் பனையூரான்
வாழ்வுறுங் கும்மி யடியுங்கடி

16 தெய்வத்தை நம்பியே கெட்டவருமதன்
தியானஞ் செய்து வீண்பட்டவரும்
வையகத்தில்லை வளர்பனை யூருடை
மகான் கும்மி யடியுங்கடி

17 ஈசனினைப்பு மடியார்க ணேசமு
மின்றி யுலகிலோ ரின்பமுண்டோ

பாசமறச் சிவயோகன் பனையூரன்
பாமன் கும்மி யடியுங்கடி

18 தொந்தமுவாசைத் தொடர்பறுத் துச்சியிற்
றெருந்தோ மென்றுடுந் தொனிகேட்டு
எந்தை புராரிதன் மைந்தன்பனையூ
ரீகையான் கும்மி யடியுங்கடி

19 செத்தாரைச் சாவார் சுமந்துபோதல்கண்டு
சித்தங் கலங்காது முக்காலமும்
செத்திடோ மென்று தெளிந்து பனையூரன்
சிங்காரக் கும்மி யடியுங்கடி

20 மன்ற மலர்ச்சோலை சூழுங்குன்றக்குடி
வாழுங் கணபதி வாழ்த்திடவே
நின்றுநடம்புரி நித்தன் பனையூரை
நேர்ந்து கும்மி யடியுங்கடி




---

# தெட்சிணாமூர்த்தி சுவாமிகள்

## ஆனந்தக்களிப்பு.

குருவைப் பணிந்திடு மனமே எமன்
குதித்துவந் துதைத்துன்னை வதைத்திடு முனமே (குரு)

1 பொருத்தம்பார்த் துருத்தாய்வி வாகம்-செய்த
பூவையு முறவோரும் புகல்வாரனேகம்
குருத்தெனப் பருத்தவித் தேகம்-செத்தால்
கூடவாரிவ ரோடென்ன சிநேகம் (குரு

2 மடப்புகு நாய்போலப் பல்லைக்-காட்டி
மடையர்பின் சென்றுதம் முடைசொல்வ தில்லை
இடம்பொரு யேவலாந் தொல்லை-விட்ட
இல்லத் துறவிக் கிணையாரு மில்லை (குரு

3 மைவிழி மாதர்மே விச்சை-வைத்து
மாடாயுழைத்து மலைத்துந்தன் மிச்சை
பொய்சொல்லிப் பொருடேடி லெச்சை-கெட்டு
பூதம்போ லலைவதி லெடுக்கலாம் பிச்சை (குரு)

4 செத்துஞ் சாகாதவர் முத்தர்-அவர்
செய்கை யறிந்துதா முய்குவார் பத்தர்
சித்தந் தெளியாதார் பித்தர்-இந்தத்
தேகத்தை நம்பித் திரிவா ருலுத்தா (குரு

5 சொத்துக்கள் மோட்சந் தாரது-ஞானஞ்
சொல்லுங் குருவரு ளல்லால் வாரது
தத்வவிசாரசார் . போது-பவர்
தன்னையறிவது சத்யங் தப்பாது (குரு

6 ஏகம்பிரமமென் றெண்ணு-மற்ற
வெல்லா மசத்தென வல்லதாய் நண்ணு
யோக குருபூசை பண்ணு-வுந்தன்
யுத்தியாற் புத்த முதைத்தின முண்ணு (குரு

7 ஆசா பாசங்களைத் தள்ளு-தானே
அனைத்துமி ரென்ப தறிந்துநீ கொள்ளு
ஆசான ருட்டுதி விள்ளு-நமக்
காகாது கஞ்சாவபின் வெறிகள்ளு (குரு

8 சேயன் கணபதி வேண்டு மையன்
தெச்சிணாமூர்த்தி திருத்தொண்டு பூண்டு
மாயவலைவிட்டு மீண்டு-வந்து
மானிட சென்மத்தை வீணிடா தீண்டு (குரு

---

## இடையிற் றனிச்சொற்பெற்ற தாலாட்டு

1 நெஞ்சகப் பொன்றொட்டிலிலே நிர்விகற்பமெத்தையிட்டு
பஞ்சமறக் கண்வளரும்—என்னையன்
பனையூர்க் குருபரனே.

2 ஆலயங்களெல்லா மலைந்து மனநோமாவல்
பாலன் கலிதீர்த்த—என்னையன்
பனையூர்க் குருபரனே

3 மாலைநிலாப் போலென் மனங்குளிர மேலூர்ந்து
பாலுண்டுறங்கும்—என்னையன்
பனையூர்க் குருபரனே

4 வேர்த்துமுளம் வெதும்பும் வெவ்வினைக டாமுகம்
பார்த்து விளையாடும்—என்னையன்
பனையூர்க் குருபரனே

5 செஞ்சிலம்பு பாடச் சிறுதே ருருட்டிவந்து
பஞ்சணையிற் றூங்கும்—என்னையன்
பனையூர்க் குருபரனே

6 திரைமார் வணங்கச் சுரர்முனிவர் காத்திருக்க
பாமார்த்த நித்திரைபோம்—என்னையன்
பனையூர்க் குருபரனே

7 பூமனரன்மால் புகழ்தோழ ரோடுவந்தென்
பாமலரைச் சூடும்—என்னையன்
பனையூர்க் குருபரனே

8 பூத்தநவ ரத்தினமும் பொற்காசு முத்தமதில்
பாத்திகட்டி யாடும்—என்னையன்
பனையூர்க் குருபரனே

9 முந்நீர்க் காலுவந்தமோனீ பொன் மேனியெங்கும்
பந்நீர் மணக்கும்—என்னையன்
பனையூர்க் குருபரனே

10 சரஞ்சூடிப் பொன்வாணி சங்கரியின் கைவளர்ந்து
பரஞ்சோதி வீசும்—என்னையன்
பனையூர்க் குருபரனே

11 கண்ணேமணியே கரும்பே தேன் சர்க்கரையே
பண்ணே பழம்பொருளே—என்னையன்
பனையூர்க் குருபரனே

12 அந்திவெடிமுல்லை யரும்புனகை கொண்டு வந்து
பந்து விளையாடும்—என்னையன்
பனையூர்க் குருபரனே

13 சாய்மானத் திண்டுவைத்த சப்ரமஞ்சக் கட்டிலிலே
பாய்மீதமரும்—என்னையன்
பனையூர்க் குருபரனே

14 மண்மே னடவாதென் மௌன மலரணைமேற்
பண்பாய்த்துயிலும்—என்னையன்
பனையூர்க் குருபரனே

15 இலகுமணிவைத்தே யிளைத்தொளிருஞ் செம்பவளப்
பலகையி லுட்காரும்—என்னையன்
பனையூர்க் குருபரனே

16 அடுக்குமல்லி முல்லையந்தா ரந்திமலர் சிந்திவைத்த
படுக்கையி லுட்காரும்—என்னையன்
பனையூர்க் குருபரனே

17 கடிகமழ் சந்தம்புனுகு கத்தூரி குங்குமந்தோய்
படிகமேடை மேவும்—என்னையன்
பனையூர்க் குருபரனே

18 சாங்காப்பு தண்டைசுட்டி தங்கச் சதங்கைமின்ன
பறந்தூச லாடும்—என்னையன்
பனையூர்க் குருபரனே

19 அள்ளியள்ளித் தொண்டர்க் களித்தசிரமந்திர
பள்ளிகொள்ள வாரும்—என்னையன்
பனையூர்க் குருபரனே

20 ஆக்கமளிக்கு முன்னை யானடையமுன்னுளென்
பாக்கியஞ் செய்தேனோ—என்னையன்
பனையூர்க் குருபரனே

21 வச்சிரமே முத்தே வைடூரியப்பணியே
பச்சை மாகதமே—என்னையன்
பனையூர்க் குருபரனே

22 தவளத்தாளமே தங்கமே ரத்தினமே
பவளக் கொடியே—என்னையன்
பனையூர்க் குருபரனே

23 செச்சை கமழுமையாள் சேர்த்தணைத்து முத்தமிடும்
பச்சைக் கிளியே—என்னையன்
பனையூர்க் குருபரனே

24 காவலர்பெய் குன்றைக் கணபதிக்கோர் கற்பகமே
பாவமெலாம் போக்கும்—என்னையன்
பனையூர்க் குருபரனே.

---

## பனையூர் சிலேடை வெண்பா.

1 தோத்திரஞ்செய் வாருளத்துஞ் சூழகத்து மெவ்விடத்தும்
பாத்திரந்தான் கொள்ளும் பனையூரே—கீர்த்தி
தருநாத சங்கரநா ராயணரா மெங்கள்
குருநாதன் வந்திருக்குங் கோயில்

2 தீர்க்குமடி யார்வினையுஞ் சேர்ந்தறியாக் கன்னியரும்
பார்க்கப் புறம்போம் பனையூரே—நேர்க்குநே
ரஞ்ஞானப் பேயை யதட்டியென்னை யாதரிக்கும்
மெஞ்ஞானி வாழ்கின்ற வீடு

3 மெல்லக் கனிரசமும் வெண்பிறைக்கோட் டானைகட்கும்
பல்லிக் குணவாம் பனையூரே—பொல்லாப்
பவத்தா லடியேன் பாதவியா தாட்கொள்
தவத்தா னிருக்குந்தலம்

4 வாயசன பந்தியினு மஞ்சுலவு புஞ்செயினும்
பாயசமு மேயும் பனையூரே—தூயசுரர்
மூவருங் கொண்டாடு முறையிற் றனையறிந்த
தேவ ரிருக்கின்ற சேர்வு

5 செல்லத் தெருக்களிலுஞ் செஞ்சடையான் தோள்களிலு
பல்லக் கிலங்கும் பனையூரே—புல்லுலக [ம்
வெம்பிரமை நீங்கி யிதோபதே சம்பயிற்றுந்
தம்பிரான் வீற்றிருக்குஞ் சார்வு

6 அண்டர் பெருமானிடத்து மன்னநடையார் முலைக்கும்
பண்டமலைசேரும் பனையூரே—கண்டுந்
தகானிலையிற் போய்ப்போய்த் தளர்ந்தேனைக் காத்த
மகா னுபவன் மேவும் வசதி

7 பெண்ணிணங்கு வாலிபரும் பிச்சிமலர் வண்டுகளும்
பண்ணையெங்கும் பாடும் பனையூரே—மண்ணினையும்
காமுற்று மாயைக் கடல்வீழா தெந்தனையாள்
மாமுத்த ரூரார் மனை

8 தேடுஞ் சிறுவர்களுந் தெள்ளூர்க் குளங்களிலும்
பாடம் படிக்கும் பனையூரே—நாடற்
குரியோ ருளக்கமலத் தோன்றுபோ லோங்கும்
பெரியோ னமர்ந்திருக்கும் பீடம்

9 மஞ்சவறைக் குள்ளு வந்தடைந்தார் தங்களுள்ளும்
பஞ்ச மறுக்கும் பனையூரே—நெஞ்சில்
மறந்து திரிந்தேனை வாவாவென் றுண்ட
துறந்தா னுலவுந் துறை

10 நந்துந் தவத்தினர்க்கும் நன்மடவா ராடுதற்கும்
பந்தங் கெடுக்கும் பனையூரே—சிந்தனந்தந்
தென்யா தெனக்கருளி யேகம் பிரமமென்ற
சன்யாசி நிற்குந் தடம்

---

## தலைவி தாதிக்குரைத்தல்

### பனையூர் வெண்பா.

1 எங்கோன் வருவதனு லென்னகச்சே டிதெருவிற்
கொங்கோ ரம்பைநட்டுக் கோலமிடு—சிங்காரஞ்
சூடெங்கு மல்லிகைப்பூத் தூவு விளக்கேற்றிவைத்து
வீடெங்கும் பொற்பாய் விரி

2 ஒற்றுமையென் னெஞ்சா முயர்பாவா யெம்பெருமா
னிற்றைக் கெழுந்தருளி யிங்குவருங்—கற்றசுர
வாரணங்கு நின்றாடு மாவணத்தி னுங்கிளநீர்
தோரணங்க ளெங்குந் தொடு

3 மும்பாழ் கடந்தகுரு மூர்த்திவந்து சார்ந்திருக்கத்
துப்பா தனவகைகள் சூழவைத்து—மொப்பநடுப்
பொன்மேடை யுண்டுபண்ணிப் பூவா லலங்கரித்தே
யென்சேடி பன்னீ ரிறை

4 பூசானு பூதிபெற்ற பூமான் வருவதனாற்
றாசாரி ழைமருங்குற் றோழியே—ரோசாவின்
தஞ்சுயபன் னீர்தெளித்துச் சப்ரமஞ்சக் கட்டிலிலே
பஞ்சணையிற் பூவைப் பரப்பு

5 பால்ய வயதான பணிப்பெண்ணே என்குருவின்
கால்வலிக்கு மேல்வலிக்குங் கைபட்டால்—நூல்வழியாய்க்
கண்டுவந்து போட்டுநீர் காய்ந்த பாலாடையுடன்
கொண்டுவந்து ஆற்றிக் கொடு

6 செங்கமலத் தாணேரன் சேடியே என்குருவின்
றிங்கு வருவா ரிசைந்தமுல்லைச்—சிங்கார
மாலைகட்ட வேண்டு மணிவிளக்கி னெய்யூற்றி
மாலை விளக்கேற்றி வை

7 பாங்காய்ப் பணிவிடைசெய் பாங்கிகா ளென்னுளத்துற்
றோங்காதி நாதன்வந்தா லோடோடி—நீங்கணின்றே
வெஞ்சா மரைவிசிரும் மெய்க்குப் பன்னீர்தெளியும்
செஞ்சாந்து மாலைகொண்டு சேரும்

8 மலைத்தேன் மலைத்தேனென் வார்த்தையா யெங்கோ
நிலைத்தேர் தெரியி னிமிடத்—துலைவைத்
திருக்கமுட னட்டுச லுப்பரிகை மேடை
தெருக்களெலாம் பொன்னுகச் செய்

9 பாங்கியே யெங்கோமான் பாலெதிர்சென் றேயழைக்கத்
தேங்காய் பழம்பன்னீர் செஞ்சாந்து—பூங்கொலைகள்
பொங்குமனந் தாம்பூலம் பூமாலை சம்பளமுந்
தங்கத்தா லத்தில்வைத்துத் தா

10 இன்னும் வரவில்லைகோ வென்னற்க வென்றோழீ
பன்னு மிலவங்கம் பாக்கேலம்—சுண்ணமுடன்
வாளினிள வெற்றிலையும் வைத்துமணிச் செல்லமதை
மாளிகையின் மேலெடுத்து வா

11 மங்கையர்கா ளென்போன்ற மாபாவி யேழுலக
மெங்குங் கிடையாது ஏனென்று—லங்குவரு

மாடவரைக் கண்டேனு மாசைதணிப் பார்யானோ
வீடதன்றிக் காண்கிலேன் வேறு

12 கோகிலங்கா ளுங்கள் குலமாய்ப் பிறந்தாலும்
வாகிலங்கும் பூங்கா வனந்தோறு—மேகிப்
பழம்புசித்து நேயப் பறவையொடுங்கூடி
நலம்புகுத்தி வாழலாம் நான்

13 முந்துவன சத்தே மோகனாரா கம்பாடி
வந்து மதுவருந்து வண்டுகாள்—கந்தன்
றவளுங் களுக்களித்த சந்தோடம் போன்று
மிவளுக் களித்திலரே ஏன்

14 நல்ஞான சித்தர்நவில் பனையூர் நாதனென்னைக்
கல்யாணம் செய்து களித்திலரே—மல்லார்
சடங்காயா ரெத்தனைநா டான்சகித்து வாழ்வா
படங்காத காமத் தழல்

15 மைப்படியுஞ் சோலை வளர்பனையூ ராண்டவர்க்கே
கைப்பிடித்துத் தந்தே களித்திலரே—வெப்பிற்
சமைந்தவர்க டாங்குவரோ தண்கடற் செந்தீயைச்
சுமந்துவரு வெண்ணிலாச் சூடு

16 வேலிகொட்டு நெல்லும் விளைபனையூ ரும்பருக்குத்
தாலிகட்டி வைத்திலரே தாய்தமரோர்—மாலைவரும்
வானத்தை யிந்தை மலைக்காற்றைக் கண்டாலார்
மானத்தைக் காப்பாற்று வார்

17 ஓங்குமஞ்சும் புள்ளு முறைசோலை மாளிகைமேற்
றூங்குமஞ்சக் கட்டிலுந் தூங்குமோ—பாங்கியர்கா
ளுண்க ளுகுத்தளிபா டோர்பனையூர் வள்ளலையென்
கண்கள் காணுதிருந்தக் கால்

18 ஆரப்பணைப் பனையூர்க் காருமறி யாமலிராச்
சேரப் புறப்படுமென் சேதியெல்லா—மூறிய

முன்னீயேன் கத்துகின்றாய் முத்தா ரலங்காரப்
பொன்னா புரமே பொறு

19 அல்லிமலர் மெத்தை யமுத்துமெனும் பூந்தாளீ
கல்லுமுள்ளும் பாராதிக் கானகத்தே—செல்ல
மனந்துணிந்த தென்னேடி மாலைப் பிறைபோற்
றனந்தனிலே காயமென்ன சாற்று

20 பத்திவழி யுன்னும் பனையூரான் பாடலையே (விடத்
வைத்திசையாய்ப் பாடியிக வாஞ்சையெலாங்—கைத்து
தேன்பிறந்த சேர்க்கையெவன் செய்தானோ கோயிலெல்
நோன்பிருந்து பெற்றமக ணேவ (லாம்

21 வேதனையோ வேன்படைத்தான் மெல்லியபூஞ்சல்லாவும்
போதுமுா சப்பொருகாப் பூமேனி—மாதர்தமைக்
கொல்லாமற் கொல்லுங் கொடியவிடத் தீவிசிரும்
பொல்லாத வெண்ணம் புலீ

22 விந்தைமிகு வார்கிழிந்து விட்டதே பன்னீர்தோய்
கந்தசந்த னந்திபோற் காந்துதே—இந்து
கிரண்டதந்தோ பனையூர்ச் சீமான் வாரானே
விரண்டுகண் டுங்கா திரா

23 கார்வக் துலவுங் கமழ்சோலை சூழ்பனையூர்
சீர்வந் துலவவளர் தேவபிரா—னார்வந்து (ங்
கொண்டனைத்தா லன்றிக் கெடுத்திடுதின் பண்டமெல்லா
கண்டணைத்தே னுங்கசப்பாங் காண்

24 விண்ணிலா வோர்மதிக்கே வெம்பியறையுட் புகுந்தே
னெண்ணிலா வெண்ணிலவிங் கெய்தியவே-கண்ணீர்வந்
தோங்குதனச் சந்தத்தோ டூறித் தெளிக்கின்ற
தீங்கையெங்கு சொல்வேண்டி சேடி

25 கன்னியரே எம்மனதைக் கம்மலைகாட் டும்பனையூ
ரின்னினியே சென்றுரையி ரெங்கோவிற் —கன்னமன்ன

வேந்திழையா னித்திரைகெட் டென்னேரங் காத்திருப்
சாந்தகுண ளாவெனவே தான் (பாள்

26 பைம்புயலார் மேடைப் பனையூரான் வந்துநின்ற
லம்புவிழுஞ் செந்தீபோ லாருதோ—சம்பளம்போ
லாவாளி பட்டுடுத்து மாயாதி நாயகன்கைப்
பூவாளி பட்டுநொந்த புண்

27 கொலைவா ளளிகடுசேல் கும்பிடுமைக் கண்ணீ
ருலைவாய் மெழுகா யுருகாதோ-மலைவா
னனைக்கும் பனைத்தலஞ்சார் நாத னழகெல்லாம்
நினைக்க நினைக்கயென் னெஞ்சு

28 பாவையர்க்குப் பாவையரோ பார்த்துவா யூறனமே
பூவணையி லேநடக்கும் பூங்குயிலே-வாவெனமுன்
னெம்பெருமான் வந்தா லிரண்டறக் கலப்பதல்லால்
வம்பிடவு முண்டோ வழி

29 மானார் சிரோன்மணியே மாளிகைமே லேயுலவுந்
தேனார் துவரதரச் சிங்காரி—நானேநீ
என்றே பனையூரா னென்றே வருவானோ
அன்றே யென் றன்ப மறும்

30 மோக மறநமக்கே முத்தி கொடுப்பவரொன்
ருகமமொன் றன்பரெலா மஞ்சலிக்கும்—யோகப்
பனையூ ருடையானைப் பாடிப் பணிந்தே
னெனையூ றடையா தினி

---

## பனையூர் வெண்பா.

1 ஆச்சரிய மென்றே யகிலமெலாங் கொண்டாடும்
பூச்சொரியுஞ் சோலை பொலிபனையூ-ரீச்சுரரா
மெங்கள் குருநாத னெண்ணம்வரும் போதெல்லாம்
பொங்கித் ததும்புமநு பூதி

2 மலநீ ரவிரோத வான்பொருளாய்த் தோன்றி
நிலநீர் வளப்பனையூர் நிற்கும்-நலகுருவை
கைகடொழ வாய்புகழக் கண்களிக்க நெஞ்சோம்ப
மெய்குளிர்தா னீழ லுறவே.

3 பூங்காவனமும் புனற்பொய்கை செய்களுஞ்சூழ்
பாங்காம் பனையூரான் பண்ணுலவத்-தூங்கா
தசைந்தஞ்சே லஞ்சேலென் றுடுவது கண்டாற்
கசிந்துருகு மென்னெஞ்சக் கல்.

4 கூழ்துன்று மம்பலத்திற் கூத்தாடி யென்றுளத்தும்
தாழ்வின்றி நற்பனையூர்த் தண்டலத்தும்-ஆழ்கருணை
வெள்ளம் பெருகிவா வீற்றிருக்குஞ் சற்குருவாம்
வள்ளல் நீடூழியெலாம் வாழி.

5 இல்லந் துறக்கவென்று லேற்றுன் கிருபையில்லே
னல்லாதில் வாழவென்று லாத்தியில்லேன்—பொல்லாத
பாவிபிறந்த பரிகாச மென்ன சொல்வே
னுவிதருந்தென்பனையூ ரா

6 தாம்பே ரான்போற் றனித்திருந்து பாடுகினுஞ்
சோம்பேரி யென்னுரோ தொல்லுலகோர்-தேம்பாய்
வருண மலரோடை வளைபனையூ ராண்டான்
கருணை பெருதிருந்தக் கால்

7 வருந்து வதுமென்கொல் வனங்குகை பன்னுடுங்
கருதி யலைந்துழனைக் காணேன்—பொருளில்லைதேர்
ஞாலங் கடந்துநிற்கும் ஞானப் பனையூரா
காலங் கடத்தாமற் கா.

8 ஏழையழுத கண்ணீ ரேழு கடலினுக்கும்
பேழை முகிற்கும் பெரிதாமே-மாழைநிகர்
துன்றுன்றன் வாழ்வைப் பனையூரா நீசொல்வ
தென்றென்றே எண்ணியெண்ணி யேங்கி

9 முச்சுடரா யானந்த மூர்த்தசிவ லிங்கமதாய்த்
தச்சிணா மூர்த்திவளர் சந்நிதிபோய்மெச்சு
விருப்பு வெறுப்பகலும் வெவ்வினையென் னையும்
நெருப்பி லிட்ட பஞ்சாம் நெஞ்சே

10 மற்பிசகார் வீரர் மதிபிசகார் கற்றுணர்ந்தோர்
சொற்பிசகார் நல்ல சுகுமான்கள்—கற்பகக்காப்
பாக்கியமும் வேண்டார் பனையூர்க் குருமூர்த்தி
வாக்கியமேற் கொண்டொழுகு வார்.

---

## கட்டளைக் கலித்துறை

1 மாத்திரைப்போது மறவார் மனநில வாயிலன்பாஞ்
சேத்திரந்தான் செய்தறிவாஞ் சிகரி யருட்கொடியும்
நேர்த்தியதாய்க் கொண்ட விரோதவர்ச்சகர் நின்றுதொழக்
கூத்துகளாடி நிற்பாரேபனையூர்க் குருநாதனே

2 ஆடும்படி மிசையாமா லகிரித் தல்பகலுங்
காடுஞ்செடியுங் கடந்தூர்க டோறுங் கவலைகொண்டே
வாடும்படிவிட ஞாயமுண்டோதிரு வாழ்மலர்த்தாள்
கூடும்படிக்கருள் செய்வாய்பனையூர்க் குருநாதனே

3 தாபந் தவிர்த்தருண் மெஞ்ஞான வாழ்வின் றமறிந்தும் [வே
தீபந்தனைக்கொண்டு கேணியில் வீழ்ந்தான் செயலென்ன
மாபந்தமாற்படும் பொல்லான் மகிழோர் வழிசொல்லியே
கோபந்தணிந்தருள் செய்வாய் பனையூர்க் குருநாதனே

4 புறையற்ற நெஞ்சினர் போற்றுமுன் னூபுரப் பொன்மலர்த்தா
ணிறைவுற்றிடத் தொழாப் பாவியான்கூவி யிந்நோம்நின்னைக்

கறையற்ற வெள்ளமாய்க் கண்ணீர்கவியக் கனிந்தழைத்தேன்
குறைவற்ற மெஞ்ஞானி வாவாபனையூர்க் குருநாதனே

5 மிடியேபடமுடி யாதினிமே லென்னை மெய்யருட்சே
வடியேயடையவந் தாண்டு கொள்வாய் மவுனாநந்தனாய்
படியேபுகழப் பரிதியுமிந்தும் படிந்துசெல்லுங்
கொடியேறுசந்நதி கொண்டாய்பனையூர்க் குருநாதனே

6 மிண்டனைக் குண்டனை வீண்வாதியைப்பல வேட்கையுறும்
வண்டனை மாயாவிகாரனை மான்விழி மாதர்தங்கள் (ந்து
தொண்டனையுன்னைத் தொழானைக் கருணையாய்த் தோன்றிவ
கொண்டனைத் தாண்டருள் செய்வாய்பனையூர்க் குருநாதனே

7 சீப்பிட்டழகுறச் சீவஞ் சடைமலர்ச் செண்டசையக்
காப்பிட்ட கைத்தொடி யாழியுமின்னக் கமழ்ந்தலையும்
பூப்பிட்ட மெல்லியர் போகக்கடலிற் புகுமென்னைக்
கூப்பிட்டருள்குல தேவாபனையூர்க் குருநானே

8 ஈசாயினியெனைக் காப்பா ருனையலா தில்லையென்றே
தேசாயிலகுமுன் சீர்பாததாமரை சென்னிவைத்தே
நேசனுமாய்ப்பெற்ற தாய்தந்தை யாகவு மன்புகொண்டு
கூசாமலெந்தனை யாள்வாய்பனையூர்க் குருநாதனே

9 மைந்தாவெனமுனம் வந்தோருபதேசம் வைத்திணைத்தாள்
தந்தாலரிதாவ தேதெமக்கேதவத் தார்கண்மணீ
சிந்தாமணியே செழுமணிஞானச் சிவமணியே
கொந்தார்புரவம் புடைசூழ்பனையூர்க் குருநாதனே

10 வம்பிட்டகொங்கை மடமாத ராசையால் வையகத்திற்
செம்பிட்ட காசையும் பொன்னையுந்தேடினான் சின்மயத்தாள்
நம்பிட்டம் வந்துடன் காத்திடுமோவென நான்மலைத்தே
கும்பிட்டுமேத்தெடுக் கின்றேன் பனையூர்க் குருநாதனே

11 பூணாதுபூண்டே புவியாளி னுந்தனாப் போவதென்றே
பேணாதுனையடைந் தாரெனக் கேட்டுமிப் பேயுலகில்

நாணுதுழலினும் நாயேனுன் ருண்மலர் நம்பினதாற்
கோணுது வந்தருள்செய்வாய் பனையூர்க் குருநாதனே

---

## சற்குருக்கண்ணி

1 நீர விராமகிரிச் சித்தர்பெரு மானுரைத்த
சார மறிந்து தவமுடித்த சற்குருவே

2 ஈசன்முத னீசன்வரை யெள்ளளவும் பேதமெண்ணு
தாசையற்ற மோட்ச மடைவேனே சற்குருவே

3 மனக்கவலை நீக்கிவிட்டு மானுபி மானமற
வுனக்கடிமை யாவேனே வுன்னரிய சற்குருவே

4 வினைக்குலமா துக்கசுக மிச்சை பயமரண
மெனக்கில்லை யென்றே இருப்பேனே சற்குருவே

5 செத்திடுத லுற்பவித்தல் தேகதன்ம முக்காலும்
நித்தியனு னென்றே நினைப்பேனே சற்குருவே

6 வானே ருலகமெல்லாம் வாஸ்தவத்தி லில்லையென்று
நானேநீ நீயேநா னுவேனே சற்குருவே

7 வீசகோசப் புழுபோல் வீணுய் மயங்குமெந்தன்
பாசமோசந் தொலையப் பாராயோ சற்குருவே

8 சலசந் திரன்போற் சலிக்குமெந்தன் பத்தியிலுன்
அலகிலாச் சோதி யமையுமோ சற்குருவே

9 பஞ்சினிலே வன்னி பட்டதைப்போற் போமேயென்
சஞ்சிதமு முந்தன் தயவிருக்கச் சற்குருவே

10 மட்டுப் படாத மனக்குரங்கைக் கட்டிவைத்து
சுட்டுத் தொலைத்துச் சுகிப்பேனே சற்குருவே

11 பிள்ளையைப்போல் மெல்லவந்து பேர்கொடுக்குங் கோபமென்ற
கொள்ளிவாய்ப் பேயைக் குலைப்பேனே சற்குருவே

12 பறந்த குகைசார்ந்து பசிவந்தா லூர்களிற்போய்
இரந்துண்டு சும்மா யிருப்பேனோ சற்குருவே

13 கொஞ்சியரைக் கண்டாற் குடிகெடுக்கும் கூற்றுவனென்
றஞ்சி யுனைவந் தடைவேனோ சற்குருவே

14 சொர்ப்பனமா மிவ்வுலகத் தோற்றமற்ற நிர்விகற்ப
அற்புதத்தை யென்று ளடைவேனோ சற்குருவே

15 ஓரின்ப முங்கிடைய துழலும்வினை யாளனுக்கு
பேரின்ப ஞானமழை பெய்குவீர் சற்குருவே

16 ஆரா ரிருந்தென்ன வாரார்போ யென்னவெம
னோரா தரிப் பாரார் நீரல்லாற் சற்குருவே

17 பட்டுப்பட்டுத் தெளியாப் பாதகனுக் கோர்கெதியை
வெட்டவெளி யாயுரைத்த வேதாந்த சற்குருவே

18 உலைபோ லெரிந்தென் னுடலையுருக் குங்கவலை
தொலைய வொருமருந்து சொல்லுவீர் சற்குருவே

19 நாணஞ் சிறிதுமின்றி நாடோறும் வெம்பசியால்
வீணரிலை மேவ விடுவீரோ சற்குருவே

20 அன்பாலுமை வணங்கி ஆத்மவிசா ரணைசெய்
தென்பாவம் நீர்க்க யெழுந்தருளுஞ் சற்குருவே

21 சாதிமுறை வர்ணாச்சிரம தர்மமெய்யை விட்டுச்
சோதிமய மானவெற்குச் சொல்வதுண்டோ சற்குருவே

22 முத்தொழிலின் கர்த்தாவு மூவுலகு முத்தர்தமை
நத்திடினெத் தேவதைக ணத்தாவோ சற்குருவே

23 அரன்மால் சினந்தாலு மாற்றலாஞ் சற்குருவாற்
பெரியோர் சினந்தாற் பிழைப்பாரோ சற்குருவே

24 ஆடாத வாட்டமெல்லா மாடிடினும் நெஞ்சிலழுக்
கூடாடாத் தன்மை யுறுவர்க்கே சற்குருவே

25 பல்தொழிலே செய்தாலும் பாராள்கினு மனையோ
டில்வாழ்கினும் பெரியோர்க் கேதமுண்டோ சற்குருவே

26 கற்றுங் கலார்போலே காண்பிப்பார் முத்தர்மய
லற்று மறுர்போ லலைவதென்ன சற்குருவே

27 புத்தகங்கள் பார்த்துப் புலவனெனப் பேரெடுத்தாற்
சித்தமதிற் செங்கேழ் திகழுமோ சற்குருவே

28 நீசனே யானாலும் நின்னருளைப் பெற்றவரேல்
ஆசானைக் கொள்வ ரறிவுள்ளோர் சற்குருவே

29 இஞ்சிதின்ற வானரம்போ லென்மனஞ்செய் சேட்டையைக்கண்
டஞ்சியழு தேனிரு மறிகுவீர் சற்குருவே

30 அன்பாய் வளர்த்தவுட லக்கினிக்கோ நாய்நரிக்கோ
என்பறவைக் கோதரைக்கோ விரையாகுஞ் சற்குருவே

31 அன்னைபிதா தாரமுற வாக்கையும்பொய் யென்றறிந்தே
இன்னும் விருப்புவன் யானெங்குய்வேன் சற்குருவே

32 பணப்பேய் பிடித்துழலும் பாவியெளி யேன்சடலம்
பிணப்பே ரெடுக்குமுன்னே பேசுவீர் சற்குருவே

33 அகண்ட னதீக னசரீரி யாமெனக்கே
தகம்பயந் தன்பின்பெ னறிவதார் சற்குருவே

34 மூவாசை யையுடனே மூவாசை விட்டறிவாய்
சீவப் பிராந்தி தெளியாதோ சற்குருவே

35 படித்துணர்ந்தே யெங்கும் பரிபூர்ண மானயென்னை
அடிப்பார் பிடிப்பா ரறிவாரார் சற்குருவே

36 அறிவறிந்தோ ராய்வோ ரறஞ்செய்வோ ரஞ்ஞானர்
வரிசையாஞ் சாதி வகுப்பென்ற சற்குருவே

37 ஆசையே சென்ம மதுவொளிந்தாற் சென்மமில்லை
பாசபந்தந் தீரப் பழகென்ற சற்குருவே

38 நாயாய்ப் பிறந்தாலும் நாயகா வுன்னடியை
ஓயாம லெண்ண வுதவுவீர் சற்குருவே

39 ஆட்டிங் திரியத் தடங்காதொன் றேடினருள்
ஓட்டைமிடா நீர்போ லொழியாதோ சற்குருவே

40 பையப்பையப் பழுக்கும் ஞானக்கனி யெனவென்
கையில் விபூதிதந்த கர்த்தாவே சற்குருவே

41 எவ்வுயிருங் கொன்றுண் டிருப்பார்முன் கூத்தாடுந்
தவ்வையும் பேயுஞ் சளமுமென்ற சற்குருவே

42 இப்பிறவி நீங்கி னினியாவரு மோவென
வெப்பொழுது மெண்ண மிருக்குமோ சற்குருவே

43 சாவுண் டெனச்சஞ் சதாவருத்தின் வேறுதவம்
யாவுண் டுயிர்க்கினிதா யப்பனே சற்குருவே

44 இனமயக்கந் தீர்ந்தென் னிருந்தெ னறியாதுள்ளும்
மனமயக்கந் தீர்க்கு வாயேனு சற்குருவே

45 வாங்காமல் விட்டகுறை வந்துனது சந்நிதியை
நீங்காம லென்னு னினைப்பேனே சற்குருவே

46 இன்றேடென் றன்ப மிரிய வருட்கிரண
வென்றாழ் விரித்தருளு மெந்தையே சற்குருவே

47 சைவமே ஞானத் தவமே திருவுடைமெய்த்
தெய்வமே தஞ்சஞ் சிவஞான சற்குருவே

48 தேவாதி தேவா திருப்பனையூர்ச் சீமானே
மூவா முதல்வா முடிவான சற்குருவே

49 செந்திருவார் குன்றைநகர்ச் சேயன் கணபதியின்
சிந்தைகுடி கொண்டருளுந் தென்பனையூர்ச் சற்குருவே

50 ஆழியுண்ட ராமகிரி யார்வாழி சங்கரனூர்
வாழிதெச்சி ணமூர்த்தி வாழியெங்கள் சற்குருவே

---

முற்றும். சுபம்.

## காப்பு

பிரணவப் பொருளைப் பேருவா னனைப்
பின்னுக னுமையைவேற்சுகனைக்
கருணைவாணியைச் செங்கண்ணனைத்திருவைக்
கானரா மாசல முனியைத்
தாணிசொல் பனையூர்ச் சங்கரானந்தர்
தச்சிணா மூர்த்தி பொற்பதத்தை
சரணமாய் முத்து சாமியைச் சுடலித்
தாயைமா காளியைத் தொழுவாம்.

## எழுசீர் நூல்

சீர்தருங் கமலத்தே வியர்முதலாய்த்
தேவரும் நின்றிரு விழிநோக்
கேர்தருங் குடிகட் கினியகுற்றேவற்
கிசையினின் னருளியம் பெளிதோ
கார்தருங் கமுகின்பாளைகீண் டகழிக்
கயனி லாப்புக்கி மின்னிவான்
தேர்தருஞ் சுரர்காணிக்கை யிட்டதொக்கும்
சிகமலை வீரமா காளீ 1

பத்திமையறியாப் பதகரைப் புகழ்ந்து
பஞ்சமே பகர்ந்துநெஞ் சயர்ந்து
நித்தலுமலையத் தகுங்கொலோ வெனக்கு
ணிலவென நிலவிநீ யிருந்தும்
நத்தது தொனிக்கவளிசுதி முளங்க
நவிரமா டக்கவி பலக்காய்
மத்தளமடிக்கக் குயிலிசை படிக்கு
மயின்மலை வீரமா காளி 2

பாவியென் றிகழ்ந்து பழிக்கினும் பஞ்ச
பாதக னென்றுகை விடினும்
கூவிநின் றழுதுன் கோயில்விட் டகலேன்
கொடியுன தடியையு மறவேன்
வாவியின் கமல மலர்கிழித் தனங்கள்
வளர்புரி யண்டமென் றிறகுட்
காவிவாய் கொடுங்கோத் தணைத்திடு மயின்மாக்
கண்மணி வீரமா காளி 3

மிடியெனுங் கடலி னோயெனுந் திரைகண்
மேலுமே லும்பொருத லக்கண்
அடியனேன் சகியே னம்மைநிற் கபய
மபயமென் றழுதல்கேட் டிலேயோ
கடி நறவருந்தி வண்டுக டுயிலக்
கன்னியர் கனியெனப் பொருக்கி
மடிநிறைத் திலம்வந்திலேயென நகைக்கு
மயின்மலே வீரமா காளி 4

கரும்படி யிருந்து சுவைத்தன நேயங்
காட்டிடுங் கொடியபா தகரின்
வரும்படி விரும்ப வைத்தனே யிதனே
வருந்தியா ரிடமுறை யிடுவேன்
சுரும்படி படத்தேன் றுழிமழை பொழியுஞ்
சோலேமே னிலவைவா னரங்கள்
பொரும்படி கனிகொண் டெறிந்திடு மயின்மாப்
புண்ணிய வீரமா காளி 5

நாலுதிக் கினுங்கா லென்பதுந் தேய
நடந்தொரு பலன்பெரு தலுத்துன்
காலிணேப்பிடித்தேன் கைவிடா தெமையுங்
கடைக்கணித் தருளுமம் மணியே

மாலிலக் குமியும் வந்திருப் பதன
மங்குறங் கனக்கொடி குமிறும்
சிலமிக் கிரண சிகரிமா ளிகைசூழ்
சிகிமலே வீரமா காளி 6

மண்ணள வாசை மருவெனேக் காத்து
மைந்தவென் றருளியென் பகைவோ
ரெண்ணள விலரா யிருப்பினுங் கணத்தி
லெரிக்குமுன் றிருக்கழன் மறவேன்
கண்ணள வரிய சிகரியின் றாவி
காசினி முற்றெருளி பாப்பி
விண்ணள வுயருங் குன்றைமா நகரில்
விளங்கிடும் வீரமா காளி 7

தன்னலங் கருதா நின்னடியவர் போந்
தடத்திலோர் தனித்துக டருவா
யின்னலங் கொடியேன் பிறந்திருந் திடினு
மெய்துமின் பிருமைமாட் டுளவோ
கன்னலந் தாளங் கழைதருந் தாளங்
கட்செவித் தாளமா முன்மே
லுன்னலத் தாள மாலேயும் புனேயு
முயர்குன்றை வீரமா காளி 8

அசுத்தவிப் புவிமின் ஞர்பினும் நாய்போன்
றலேயுமென் னகக்குறிப் பறிந்தே
விசித்திர வடிவ மெடுத்திடா தஞ்சு
விதத்திரு வடிவெடுத் தனேயோ
நிசத்தவிக் கருணே செய்தநின் றயையை
நிகழ்த்துமா றெளியேனென் றறியேன்
பசுத்திரள் பசும்புற் பயிரிற்பால் சொரியும்
பணேக்குன்றை வீரமா காளி 9

உண்புடுப் பிடங்கே ளூறவொளிந் தழலு
மேனழமக் களினுளங் குளிரப்
பண்படுத் திரக்கங் குணம்பொருள் படைத்துன்
பாதபங் கயந்தொழப் பணிப்பாய்
புண்படுத் தகமா வடக்கியீ ரேழு
புவிகடந் திந்தியப் பகைபோய்
விண்படத் திழைக்கு மடியவர் திருமேன்
மிளிர்குன்றை வீரமா காளி 10

ஆணிழ லருமை வெய்யினின் றறிமி
னென்போன் றடிமையின் ணுண்மட்
டீனிழ கலக்க ணுய்த்திடா விடினுன்
னுயர்சுகப் பெற்றிதோன் றிடுமோ
வானிள மதியம் வந்திடத் தமது
வதனபுத் தேளிரோர் கோடென்
றீனிளங் கரிக டிருடிஞு ஞெவனென்
றெழுங்குன்றை வீரமா காளி 11

காண்பவெல் லாமுன் காட்சியா யிலங்குங்
கடுந்தவ விரதவை ராக்யத்
தூண்பா வுறக்க மொளிந்தசின் மயமெஞ்
ஞானோப தேசமென் றுரைப்பாய்
சேண்படி வனமேற் பூங்கொடி படர்ந்து
திக்கெலாஞ் செறிந்துபன் னிறமேய்
மாண்புறு மலர்பூத் துலகெலா மணக்கு
மயின்மலை வீரமா காளி 12

மங்கையர் நளின விழிகளின் மருண்டு
மலர்க்குழற் காட்டிடை மயங்கிக்
கொங்கையாங் கொடுங்கல் லிடறியே நிதம்பக
குழியில்வீழ்ந் தழிவதென் றொளிவேன்

தங்கையென் றரியுஞ் சாற்ற மூவுலகுஞ்
சணத்திலே நடுங்கவென் றானே
டங்கைவை நடித்து மகுடனை மடித்து
மமர்குன்றை வீரமா காளி 13

உத்தம னலனுள் ளொருதினைத் திலனுன்
னுருகெழு முருவமோர் பொழுதுஞ்
சித்தம்வைத் திலன்போற் றிலன்செயுந் தவமுந்
தெரிந்திலன் சினந்திடா தருள்வாய்
மத்தமம் புலிவாழ் கிடைப்பிரான் மலைமேற்
பொன்பகி நதிவயங் குதல்போல்
தொத்தனக் குவிமேற் பருப்பினெய் பொழிந்தே
தொழுங்குன்றை வீரமா காளி 14

இன்னவ னினியா னெனவுமெண் ணுமல்
வலியவந் தாண்டவிப் புதுமைக்
கென்னபுண் ணியமுன் செய்தனோ வறியே
னெங்குல தெய்வமே சரணம்
தன்னிலை யடைந்தார் தளிகளிற் றுடியாழ்
சங்குதுந் துமிதவில் முழங்க
மன்னிடும் பூசைக் குங்கில்ய மணவான்
மலிகுன்றை வீரமா காளி 15

பெற்றியென் றுலகும்பிதற் றுமின் புருவப்
பேரின்பப் பெருவரை முடிமேற்
கற்றிதென் றுணராக் கயவனுன் றுணையே
கைக்கொடுங் கறைகண்டே றுவனே
முற்றிரைக் கருப்ப முத்திருங் குவிகண்
மொய்த்திடும் வரம்புடைப் பழனத்
தெற்றுமுக் கனிகட் டுப்பறு கொதுக்கு
மெழிற்குன்றை வீரமா காளி 16

தத்தலை சுருட்டுந் தடங்கட லுடுத்த
தாணிமுற் றளிப்பவ ருளத்து
முத்தலை மூலைப்பொன் மலர்கொடி முளைத்த
முறையுமந் நளினனளின் விழியூ
டத்தலை வரும்போ லயர்ந்தடை முகிலி
னகத்திருள் சுமைதவிர்த் தமர்த்தும்
நத்தலை மயின்மாத் தாயுமிச் சேயும்
நட்டனம் வீரமா காளி 17

பற்றெனும் பவத்தின் வினைத்திரை யெறியப்
பாவையர் மயக்கெனுஞ் சுழலுற்
றிற்றெனுத் துயருற் றுழுமே ழைமுனீ
யென்றுவந் திரங்கிக்கை கொடுப்பாய்
கற்றளி வளரு மும்மதக் களிற்றின்
கன்றுக ளகழியி லுழக்கி
நற்றுதிக் கரநீ ரிறைக்கவா னுலசும்
நனைகுன்றை வீரமா காளி 18

உண்மையொன் றுளவென் றுரைப்பால் லாதஃ
துள்ளங்கை நெல்லிபோ லுடன்காட்
டெண்மலி தவத்தா ருறவிறை முடிமே
லிருக்குமு னன்பிலார்க் கெளிதோ
தண்மைகொள் கமலத் தாம்பலுங் குமிழுங்
குவளையுந் தாளமுஞ் சுமைந்து
மண்மலி முகிலைச் சுமந்தபொற் கொடிபோல்
வருங்குன்றை வீரமா காளி 19

தன்னிக ரிலாராய்த் தாணியும் வானுந்
தாடொழத் தளிவனங் குகைப்பான்
மன்னுமுன் னடியார்க் கடியனு யெனைநீ
வைத்துவாழ் வைத்தா வருவாய்

கன்னலங் கமுகுங் கதலியும் வளர்ந்து
கதிரவன் புரவிமேற் புடைத்துப்
பின்னுந்தம் பலங்கொண் டெறிந்துநின் றூடும்
பெருங்குன்றை வீரமா காளி 20

தூம்பெயிற் றுரகத் தொடையும்பா னிலவுந்
துளிபுனற் கிடைகொண்டா னிடையர்
தாம்பகட் டிடுவான் றமரை விதியுந்
தவஞ்செயுன் சந்நதி மறவேன்
ஆம்பலிற் கருவண் டாடலைக் கவிகண்
ணக்கினி மூண்டதென் றஞ்சி
மாம்பழத் தொழுகு மதுரமொண் டிறைத்து
மலைகுன்றை வீரமா காளி 21

பிறங்கிருங் கனகப் பெருவரைப் பிறந்த
பெண்கொடி நினதடி நிழற்கீ
ழுறங்கியுன் மயமா யுவப்பொடு வெருப்பற்
றுள்ளனை யுள்ளுநா ளுளவோ
கறங்கருங் கருநீர்க் கடலென மலர்பூங்
காவிரிந் துலகெலாம் நிழற்றச்
சுறங்கமீ தெனவுந் தேவர்க ளுளைந்துந்
தொழுங்குன்றை வீரமா காளி 22

அலையெறி யலம்பா ழாழிசூ ழவனி
யதனிடைச் சனித்தவெவ் வுயிரும்
வலையெறி மறலி வாய்ப்படா வகைபோ
மார்க்கமுன் மாட்டலா தெவர்க்குண்
டிலையெறி தொழும்ப ரிடுமகத் தழன்மூண்
டிந்திர லோகமட் டெழலும்
கலையெறி நிலவுங் கமலம்வெள் ளனம்போற்
காண்குன்றை வீரமா காளி 23

கச்சரப் புடைக்குங் களபசீ தளப்பொற்
கமலமொட் டெனக்கனத் திலங்கும்
வச்சிரக் காவிச் சேலைவல் லவட்டுள்
வளர்முலைத் தழும்புற வலியக்
கைச்சர முஞ்செய் தணைத்திள மயிலார்
களந்தழீ இமுயங்கினு மெமக்கோ
தச்சர மதுமுன் னடியது மறவே
னருட்குன்றை வீரமா காளி 24

வேதனு மாலு மானுமெச் சறிவாம்
விருத்திமெஞ் ஞானமெல் லடியிப்
போதமில் புலைநாய் முடைத்தலைப் படைத்த
புதுமையென் னெனப்புகல் வதுவே
ஆதவ கிரண மகழியிற் புகுவ
தாயிரந் தலைப்பணு வியந்து
மேதகு மணிகொண் டருச்சித்தல் போலு
மிளிர்குன்றை வீரமா காளி 25

உலகெலாம் படைத்துக் காத்தழித் திடுமுன்
னுபயதாட் டொண்டனே னெனையிங்
கலகையக் தகன்மற் றெவைநவை செயுமெற்
கச்சமே தலக்கணே தினியே
பலகைபட் டுலையாப் பரத்தையர் தனத்தின்
பரிமளச் சாந்தொடு மலர்த்தா
ரிலகுமுத் தாரம் புரளநின் றுடு
மெழிற்குன்றை வீரமா காளி 26

ஒருவரைச் சிலையா னுளநடங் கொளுஞ்செவ்
வருள்விழிக் கடையுடை யுனைப்போற்
றொருவரெச் சிலையுண் ஞாளியின் றவமு
முலுத்தனேற் கிலையெனன் வியப்பே

மருவிரை பாகங்கு விருண்டா தறுகு
வளைமண விதழுடுக் கலர்தேந்
திருவிரை மலர்பூஞ் செடிநெருங் காவி
திகழ்குன்றை வீரமா காளி 27

ஆயிரங் கோடி பிறவிவந் திடினு
மம்மையுன் னருளுமுன் னடியார்
நேயமும் பிணிதீர் நிறையுமநற் பவுசும்
நேரின்வே ரின்பம்வேண் டுமதோ
தாயினுஞ் சிறந்தா யெனவுந்தங் குறைக
டவிர்ந்தசந் தோடமும் பெருகித்
தூயமன் சுரருந் தொழுந்தொனி யெழுபார்
சுழல்குன்றை வீரமா காளி 28

முச்சுடர்ப் பொருளாய் முளைத்தெழுந் துலகை
முறையுடன் றயெனக் காக்கும்
பச்சிளங் கிளியே பரமத யாளீ
பார்பதி பத்தாட் சகியே
உச்சிதப் பொருளே வெமதுளங் குளிர
உவந்தரு டெருமருங் கெவனும்
பிச்சியிற் பிரச மிசைபயின் றுலவும்
பெருங்குன்றை வீரமா காளி 29

பொன்னளி முரல்தே னிதழியும் புழைப்பற்
புகார ரவம்புலிக் கீற்று
மின்னளி சடைமேற் றங்குறை தீர
வியந்தான் வைத்ததா மரையே
உன்னளி யெளியே னுளத்திமை மறவே
னுழவர்கா லுருத்துமென் றிரங்கி
மன்னளி னமிசை வலம்புரி கிடந்தே
வளர்குன்றை வீரமா காளி 30

இருக்கினு மெழினும் நடக்கினுந் தமிழ்மற்
றெழுதினு மிளமையி லனையா
ருருக்கிரு முலைவீழ்ந் துறங்கினும் நினதன்
புதவியு மறக்கற்பாற் றலவே
தருக்கிள ரரச வனமெனும் பெயராற்
சண்பகங் கடம்புகோங் கடர்ந்து
தெருக்களின் மலர்தேந் தெளித்தெழி றிழைக்குந்
திருக்குன்றை வீரமா காளி 31

இணங்குமெஞ் ஞானச் சுடர்கெழீஇ யிலங்கு
மென்னறி வெனுமணி விளக்கம்
பிணங்கிய மலவா ணவகட மூடப்
பிறிதிருண் டிருவினைப் பிணிப்புற்
றுணங்கியின் னுண்மட் டுழன்றனந் தவத்தி
யோங்கியக் கடந்தகர்ந் தனவோ
வணங்கிவாழ்ந் திடுமா றுன்னருள் வழிவந்
தனங்குன்றை வீரமா காளி 32

பந்தவெந் துயரும் பாசுகத் துயர்வும்
பரிந்தறிந் தவனவா வடையி
னெந்தவா ரெவரா லெவ்விதம் விடுபட்
டின்பம்வந் தெய்துமோ வறியேன்
சந்திர னிலவே தாளவெண் வெயிலுஞ்
சங்கின மின்னலுஞ் சகியா
தந்தாத் தலையு மடர்புனற் சிகிமே
ராசியே வீரமா காளி 33

இந்தமா ஞாலத் தெவரும்நற் சுகிபா
யிருக்கவும் ஏழைநா னொருவ
னுந்தனைப் பணிந்து முதவியற் றவன்போ
லூரெங்குந் திரிந்துவா டுவனே

சந்தனந் தேக்கு முகிற்சுமை மாசு
தவிர்ந்திடத் தாக்கித்தள் ளுவதுண்
வந்தனம் புரிந்தார் வல்வினை யெனப்போ
மயின்மலை வீரமா காளி 34

இன்றுளார் நாளைக் கிருத்தனிச் சயமன்
றெனமறை கேள்வியுள் ளிடித்தும்
புன்றுறும் புலகக் குப்பையுட் புரளும்
புலையனேன் புணைகொணு ளுளவோ
கன்றுக டாவக் கழன்மணி யொலிவிண்
காமலர் மழையுகுப் பவொக்கு
மன்றினி ளுடற் கமரர்பூ விறைப்ப
மயின்மலை வீரமா காளி 35

வான்பொரு ளளிக்கு முன்னையும் பாடி
வன்மனக் கொடியர்பாற் புகழ்கொண்
டூன்பொரு மிடியா லுள்ளங்கா லென்பு
முருகநா னடந்துவா டுவனோ
மீன்பொரு விழிமின் னிடைமயில் போல்வார்
மிளிர்முகந் தாமரை யெனவுந்
தேன்பொரு தெயிற்று னிலவெனப் பறக்குஞ்
சிகிமலை வீரமா காளி 36

எத்தனை வருமை யெத்தனை துயா
மெத்தனை கவலையும் பிணியு
மித்தனை கொடிது ளென்செய்வா னெனநீ
யின்னமுங் கடைக்கணித் திலையே
முத்தினைப் பழித்த முருவலார் கூந்தன்
முகிலென மயில்கணின் றுடத்
தத்தைகள் குலவத் தொத்துறு மதூரந்
தவழ்குன்றை வீரமா காளி 37

அந்திசந் தியுமோ மாமவ் வுமுவ்வு
மையுங்கி லீயுஞ்சவ் வுமதாய்
வந்தருள் சோதி மணிமலைக் குயிலே
வாய்திரந் தொருவரந் தருவாய்
மந்திக டாவி வான்பதித் தாவி
மணிமுடி யெனக்கவித் தறக்கான்
றெந்தணிந் துயர்கோ லோச்சுமன் னவர்போற்
சுகிகுன்றை வீரமா காளி 38

என்செய்கே னினியென் றேங்கினே னொருநா
ளேங்கிடே லென்றெனீன் றவள்போன்
மன்செயுந் திருமெய் காட்டியுந் தெளிய
வைத்தமை மரிக்கினு மறவேன்
நன்செயி லுழக்கு நாரியர் விழிக
ணற்கய லெனமலர்க் காத்தான்
முன்சிறி தேந்தி யேந்திபு மலைக்கு
முதுகுன்றை வீரமா காளி 39

துறந்துதுன் பொருத்துன் றுதிபுரி யடியார்
சொற்படி நிற்பவிப் புவனஞ்
சிறந்தெனி னினது செயலையிச் சிறியேன்
சிற்றறி வளந்துரைப் பெளிதோ
அறந்திகழ் துவச மமர்ந்தொலி சிகரி
யரண்மனைத் திருமதில் மிசைவான்
பறந்துரா யொலிப்ப தரிபயில் குழல்போற்
பரிகுன்றை வீரமா காளி 40

வந்தனை புரியேன் மகிமையொன் றறியேன்
வரியவர்க் குதவிலே னினது
மந்திரந் தெரியேன் மனிதரிற் பதராய்
வந்தவல் வினையேனுக் கருள்வாய்

கந்தனை யாறு முகக்குரு மணியைக்
கண்ணெனத் தருஞ்சிவ பெருமான்
வந்ததி கணங்கள் புடைபட நடஞ்செய்
மயின்மலை வீரமா காளி 41

தொண்டர்தம் பெருமை சொற்றவர் துணைத்தா
டொழுதவர் நிழலெனத் தொடர்ந்தாற்
றெண்டிரை வளாக முற்றிலும் பாவுன்
றிருவருள் வலியவந் திடுமே
வண்டுமூழ மலர்ச்செய்ச் சேல்விளை யாடி
மள்ளர்மேற் புரள்வதா யிரங்கண்
ணண்டர்கோ வெனவிந் திரைமுன்போ யுளம்வெட்
கருங்குன்றை வீரமா காளி 42

மனத்துற வுடையா வஞ்சனே னுலகை
மயக்கிமேல் வளர்த்தலை புலையே
னனைத்துயிர் தமதென் தறிந்தவா றொழுக
வம்மையுன் னருளமே வுவனோ
சினத்தொடு மகர வாயினைத் தவரித்
தென்கமு கடர்குலை சாய்த்துக்
கனைத்தெழு முகிலைக் கலக்கிவா ளைகள்பாய்
கடக்குன்றை வீரமா காளி 43

துறந்துமிற் சுகங்க டுங்கினு மறவாத்
தூர்த்தர்நா ளழிகா லமெலாம்
பறந்துவான் புகினும் பார்க்கொணு வின்பப்
படிகவெற் பிடைசுடர் விளக்கே
அறந்தழீ இமூால்பொற் கேதன மமரா
ராலயச் சிகரிமுத் திரச்
சிறந்துல வணிமா மண்டபம் நெருங்குஞ்
சிகிமலை வீரமா காளி 44

சிட்டருக் கிகத்திற் சோதனை வயத்தாற்
சிரமமுன் வருமென்ப ரதுபோற்
பட்டபா டனைத்தும் பார்த்துமின் னமும்நீ
பாராமுகப் படுதல்தன் மமதோ
வட்டமாம் பரிதி நாதனென் றயப்பூ
மலர்ந்துபின் மறைபிறி வாற்று
முட்டினுற் கலைநூன் முனிந்திழுப் பதுபோன்
முகில்குன்றை வீரமா காளி 45

அன்பில னினைப்பா டமைவில னடியார்ச்
சார்ந்தில னலயம் புகிலேன்
னென்பிதா வனைகே ணீயெனச் சிறிது
மிரஞ்சிலே னென்றுவீ டடைவேன்
பொன்பதி வளரு மாவுமா வென்னப்
புகழுணு நிறைமடுச் சுறந்து
றின்பமு தலர்தே னிடைகலந் தலைகொண்
டெழுங்குன்றை வீரமா காளி 46

பத்தியற் றவனீ பதகனீ தசையுண்
பாவிநீ கோபிநீ பரமா
தெத்தனீ யெதிர்நில் லாதக லெனநீ
இடித்திடித் தேசினும் பணிவேன்
கொத்தொடு முனிவோர் குலவிருள் சோலைக்
குளிர்சுனை மலர்ப்பொகுட் டனம்பே
டொத்துற முயங்கி நிலவென வயங்கு
முயர்குன்றை வீரமா காளி 47

சத்தியாய்ச் சிவமா யென்றன ருணர்ந்தோர்
தலையெனக் கண்டுபட் டினரும்
சத்தியர் தாயைக் கூடியே நாதை
தனைப்பெறு மென்றசொற் றவரோ

பத்தியைப் பழியேன் வேறொன்றைப் பணியேன்
பரிந்தருள் பணிலஞ் சாலுழக்கப்
பத்திகொள் பவளக் கான்மணி விசிர்நீர்ப்
பணைக்குன்றை வீரமா காளி 48

உன்னிய குறைபா டனைத்தையு மொளியா
துரைத்துன்றுள் குருளைபோற் பிடித்தேன்
னின்னமுங் கருணை யேனிரங் கிலையோ
வென்செய்வே னெங்குசென் றிடுவேன்
மின்னிளங் கொடியிவ் விகத்திழிந் தெனவும்
வேதன்கைத் திரமையீ தெனவு
மன்னுபொன் னிழையார் மலர்வனத் துலவு
மயின்மலை வீரமா காளி 49

ஆதியா மூலகுக் கன்னைநீ யெனச்சூழ்ந்
தருண்மலி மலர்ப்பதத் தணைதற்
கோதியாங் கமழ்கை வாரிச மமைத்து
முவந்துப தேசிக்க வருவாய்
தாதியா ரலர்ப்பூங் குழலவிழ்ந் துயர்புற்
றரையுறப் புரளமென் றுகில்கான்
மோதியே பறக்கச் செண்டுகொண் டாடு
முதுகுன்றை வீரமா காளி 50

சிந்தையி னினது திகழுழ கொழுகுந்
திருவடி வெழுதிப்பார்த் திருக்க
வெந்தனுக் கிசையு மிடங்கொடுத் திடர்தீர்த்
தெண்ணுமுன் னெதிரில்வந் தருள்வாய்
சந்திரன் புகவிண் டழுவியே தாளங்
கொழிக்குந்தண் மாடிமேற் படிந்து
தொங்கொடுஞ் சோலை தவழ்ந்தலர் மயின்மாத்
துரைச்சியே வீரமா காளி 51

செஞ்சிலை நுதற்கிஞ் சுகவிதழ்க் கயற்கட்
டிரடனக் கனிமொழி மலர்க்கைக்
கொஞ்சிபஞ் சடியிற் செஞ்சிலம் பலம்பக்
குலவிரட் சகியெனைப் பார்ப்பாய்
மஞ்சளிஞ் சியுமிஞ் சியவயற் கரும்பு
வான்மதி குடை யெனக் குடைந்து
புஞ்சையிற் றாளச் சுமையுற வளையும்
புனற்குன்றை வீரமா காளி 52

இறப்பதுற் பவிப்ப துடலியா னலனென்
றிகழுமைங் தவத்தை யுங்கடந்து
முறப்பசி வோக முண்மையென் றிருமை
யுயர்வுதாழ் வுவர்க்குநா ளுளவோ
பறப்புறு மணியுள் வணிகர்கள் பொருக்கிப்
பழமணி யெனச்சில வெறிப
வுறைப்பிர வுதிருந் தாரகை யெனவீழ்ந்
தொளிர்குன்றை வீரமா காளி 53

பதியினின் றுருகிப் பாடில னறஞ்செய்
பண்பிலன் றுயுனைப் பணியு
மதியிலன் மறவா றுறவிலன் பிறவா
வரம்பெற விரும்புநா ளுளவோ
மதியில்வேள் சிலையில் முல்லையங் கமல
வாளிவைத் தயர்ந்தன வதன
மதமுலைக் குயிலார் சாயலின் மயிலு
மலைகுன்றை வீரமா காளி 54

கொன்றுணுத் தகையுங் குணமெனும் பணியுங்
குறளைதீ ராண்மையும் நடுவாழ்
மன்றுமுன் னருட்ச்சீர்ச் செல்வமு மலர்த்தாண்
மறக்கிலாச் செருக்குமென் றடைவேன்

அன்றிலும் பேடு மனசதி பதியா
ரருமிர வாடல்கண் டிரதி
யென்றலை விதியோ ருருவிலிச் சேர்த்த
தெனுங்குன்றை வீரமா காளி 55

அடியனேன் குறைக டாநிற் றெழுது
மம்மையே வெம்மய மிடியாற்
கொடியர்பாற் செலவிட் டின்னமும் பிறவி
கொடுப்பையேற் குறையெவர்க் குடைத்தோ
நெடியபொற் குவட்டி னித்திலக் குவிக
ணெருங்கமின் னருவிசாய் வதுபோற்
றொடியமை கரத்தார் தோடனப் பணிக
டுதைகுன்றை வீரமா காளி 56

கல்லெறி கணைக்குங் கடியவாய்க் கொடியர்
கற்பிலா ருனைத்தொழாக் கயமைப்
புல்லற்பாற் றிரிருந்தும் புழுக்குடல் வளர்க்கும்
புன்மையே னன்மைநா டுவனோ
வில்லெறி பரிதிப் பரியுங்கண் சுழிக்க
வெண்டிரை தாளம்விட் டெறியும்
மல்லரு மதுவா றலங்கலா யிலங்கு
மயின்மலை வீரமா காளி 57

பிள்ளையா னுனக்கென் பெற்றவ ணீயே
பிறிதிலை யபயமுன் னடிக்கென்
றுள்ளவா றுனைவந் தடைக்கலம் புகுந்தே
னுவந்தெனைக் காப்பதுன் கடனே
கள்ளவிழ் மலர்ச்சோ லையின்மதி தவழக்
கவித்திர ளப்பமென் றேடி
யுள்ளெழுங் கசிவா னத்தெனத் திரும்பு
முயர்குன்றை வீரமா காளி 58

பெற்றவ ளுறவர் பிறரியா வரும்நீ
பெருமையு மிருமையின் பயும்நீ
உற்றவ ணீயென் னுயிர்த்துணை நீயென்
றுண்மையா யடைக்கலம் புகுந்தேன்
பொற்றக டிணைத்த பொய்கையி லலம்பும்
பூம்புன லிடைமலர் கமலத்
துற்றசே றுயிலச் சிலைகடா லிட்டு
முராக்குன்றை வீரமா காளி 59

கதிதனை யுதவுங் கற்பகத் தருவே
கடையனே னின்னைவந் தடைந்தும்
நிதிதனை நினைந்து மொருவர்பின் றொடர்ந்து
நின்றுபற் காட்டிநா னுவனே
மதிதனைக் குறைத்த வதனமை விழியார்
மலர்சிலம் பிடையொடி படுமென்
றதிதனப் பொருப்புக் கறிவிக்குந் தொனிவிண்
ணதிர்குன்றை வீரமா காளி 60

வேசியர் நளின வாசகத் துருகி
விம்மிள முலைபொரப் புணர்ந்து
தூசுறத் துயிலு மன்மதா னந்தச்
சுழிக்கடற் புகுவதென் றொளிவேன்
காசினி முழுதுங் காத்தரு டிருமால்
காட்சிபோற் கரியகொண் மூவு
மீசனேர் பொழிந்த வானுமா மலையென்
றெழுங்குன்றை வீரமா காளி 61

கொடும்பகை கணங்கள் பிணிகள்வந் துறினுங்
கோயிலை நினைந்துகும் பிடுவே
னடும்பல வரிமீ தமர்ந்துமஞ் சேலென்
றங்கஙற நொடியில்வந் தருள்வாய்

குடம்பயந் தினிநாம் குளத்தில்வீழ் வதுவே
குணமெனக் குதித்திடப் புடைக்குந்
தடம்படு முலையார் சலந்திரட் டாவி
தருங்குன்றை வீரமா காளி 62

சிற்றறி வடியேன் செய்தவோர் பிழையைச்
சினந்துநீ யுரைத்தவா றிதுகா
றிற்றெனத் துயருற் றிளைத்துளந் தளர்ந்தே
னினிப்பொறே னிரங்கிநன் றருள்வாய்
கற்றவர் பரவுங் கடுக்கையஞ் சடிலக்
கடவுளன் றெரித்தமன் மதனுஞ்
சற்றுநின் றுவக்குஞ் சவுந்தரர் குலவுந்
தவக்குன்றை வீரமா காளி 63

நலமது செயினுங் கொடியதாற் றுகினும்
நடுக்கடல் வீழினுந் துயர்நோய்
கலிகண்மொய்த் திடினுங் காப்பதுன் கடனே
கழற்றுணை புணையெனப் பிடித்தேன்
புலவியுண் டளிகள் பொருட்டிடை புரளப்
புதுமலர் விரியப்பூங் காற்றங்
குலவியே கமழுங் குன்றைமா நகரெங்
குருமணி வீரமா காளி 64

பாகையும் பசுந்தேன் பாலையும் பழித்த
பணிமொழி நினதருட் கவியு
மீகையுந் தயையுந் தவமும்நற் பொருளு
மெய்பிறப் பெடுப்பினுங் கொடுப்பாய்
ஓகையுற் றயம்பா யுறவயற் கயறுள்
ளுழவிநெற் கதிர்வளர்ந் தோங்கிப்
பாகமுற் றுமைதாள் பணிமினென் பனபோற்
பணிகுன்றை வீரமா காளி 65

உண்ணினு முணர்வற் றுறங்கினு மிகத்தெங்
குறையினு மறையின்மென் கனிவாய்ப்
பெண்ணினல் லார்பாற் பிணங்கினும் நினது
பிரமசிற் சுகபத மறவேன்
எண்ணறு முனிவோர் தேவர்நற் சுரர்பூ
ணிலகுமுத் தாரதா வடங்கள்
மண்ணுறத் தெறித்து மறைபட வணங்கு
மயின்மலை வீரமா காளி 66

பகவதி நின்து பத்தனென் றெனையே
பணிந்துநோய் நீக்கிய பலரு
மிகவதி சயித்து மெய்மையும் நோயேன்
மீட்கிலீ ரென்னினென் புகல்வேன்
மகபதி வியக்கு மலர்க்கொடி யனையார்
மாலையில் மாலைதோள் புரளத்
தகதக வெனப்பந் தடித்திசை படிக்குந்
தனிக்குன்றை வீரமா காளி 67

பெண்ணிளங் கொடியார் பேச்சிலும் பெருத்த
தனத்திலு மிடையுடை நடையிற்
கண்ணிலுங் கிடக்குங் காமவெங் கடலைக்
கடந்துவந் தென்றுனைக் காண்பேன்
விண்ணினு முருவி வளர்மிளிர் வனப்பூ
விரைதர விறைத்தநிர் மால்ய
மெண்ணறு மலைபோற் கணங்கள்கை சோர
விடுங்குன்றை வீரமா காளி 68

அல்பக லடியேன் படுந்துயர் மணையுற்
றறைபடும் பஞ்சுதான் படுமோ
சொல்பல வாலைக் கரும்புதான் படுமோ
சோதியே சோதியா தருள்வாய்

வில்பணி நுதற்சிந் தூரநற் றிலதம்
வெண்ணில வதனுட்பா னுதித்தென்
பல்வளந் தருவார் சுனையறு கிசையாழ்
பயில்குன்றை வீரமா காளி 69

பெரும்புக ழுடையுன் பிறங்குதாட் பணிமெய்
பிறழ்கிலாப் பெற்றியுற் றொருவர்
தரும்புக ழிழிவு மறந்துசொக் கருளைச்
சடுதியிற் றாவுந்தா மதமேன்
சுரும்புழு மலர்மேய் துதிக்கைமா விகைத்தோட்
சுப்பிர மணிபசி தணிக்க
வரும்பிரு முலைப்பால் சுறந்தளித் தமர்த்து
மம்மையே வீரமா காளி 70

தஞ்சமென் றுனது சரணமே சரண்செய்
தவமுயற் றறிவறி வெளிபு
ணெஞ்சமொன் றுகி நினைப்பொடு மறப்பும்
நீங்கினான் றாங்குநா ளுளவோ
மஞ்சளிஞ் சியுஞ்செங்க ரும்பும்நெற் பயிரும்
வானுற வளர்குளக் கறைமேற்
கஞ்சமுங் குமிளுங் குவளையும் படர்ந்தே
கமழ்குன்றை வீரமா காளி 71

வாழியுன் கழலென் மனத்தின்மா சிரிய
மலர்கதிர் பாப்பிவான் போன்முப்
பாழினைக் கடந்தப் பாலொளிர் களிப்பிற்
பதித்தமை பகரவும் படுமோ
ஊழியு மழியா வுறுவர்நற் றவனேற்
றுயர்தனே ருழுந்தண்டேங் கிளைசூழ்ந்
தாழியி னழகா யலைகொள்வேய் மணிசிந்
தணைக்குன்றை வீரமா காளி 72

அன்னையி னகட்டு டையிரு மதியா
யன்னநீ ரனல்வளித் துயருற்
றின்னிலத் திளமை வருமைநோய் மூப்பா
யிளைத்திறந் திடுவதென் றெளிவேன்
றென்னையுங் கமுகுந் திழைத்தவா னடவி
தேங்குமங் குலிற்குழித் திரங்கி
மன்னுநெய் தலின்றே னுகுத்திள வேனில்
வருங்குன்றை வீரமா காளி 73

யானவ னெனுங்கூற் றறவிசா ரணைசெய்
ஞானயாப் போதியாங் கனுட்டித்
தீனவன் பிறப்ப திரியவென் றடிக்கீ
ழிழிதைல தாரைபோற் றிகழ்வேன்
வானவின் முறிய மந்திகள் பாய
வளைந்துமண் டொனிபடப் புடைக்குந்
தேனமை கமுகின் குலைகளெண் டிசையுஞ்
சிதர்குன்றை வீரமா காளி 74

பழுதுடைத் தொழிலைப் பறக்கவிட் டெளியோர்
பந்துமித் திரரெனப் பாவித்
தெழுதுமுன் புகழிலெ ழிலினின் றருளே
யீகுதி யெனினெனக் கரிதே
தழுதழ வருமுத் துகிரின்வெள் ளிலைநள்
ளோய்விடத் தோவிய மனையார்
விழுதுகொள் களபங் கனிகள்கொண் டெதிர்போய்
விரிகுன்றை வீரமா காளி 75

சினத்தினைத் தாக்கித் திகழுமைம் பொறிவாய்த்
திரிபுலன் றனைத்தடுத் தகப்பேய்
தனைத்திரு மந்த்ர நாணுறப் பிணித்துன்
றளின்கீழ்த் தாணித்தென் றுவப்பேன்

கனத்தமத் தளத்திற் கடவிடுந் தொனியாழ்
கடன்முழக் குணங்கவெண் டிசைவா
னினத்தவுஞ் செவிபொத் தியல்புடை மயின்மா
யீஸ்வரி வீரமா காளி 76

வெளிப்படை யாயுன் மெய்ம்மைகண் டுருகி
விழிகணீர் மல்கமெய் விதிர்ப்பக்
களிப்பகத் தினனு யானந்தக் கடலிற்
கலைதெளிந் திருக்குநா ளுளவோ
வளிப்பட மலா சோகுசண் பகத்தின்
வாசனை வீசுமந் தைகடோ
றளிப்படை படிக்க வாவின மவுனத்
தமைகுன்றை வீரமா காளி 77

மூவருந் தேவர் முனிவரும் புகழு
முத்தமிழ்க் கவித்திரச் சுவைகண்
டேவருந் தொழவந் தருளுமுன் செவிக்கிவ்
வேழைபுன் கவிகளேற் றிடுமோ
காவரும் பிளங்கால் கமழ்ந்துல வணிகொள்
கற்றள வீதிமே டைகண்மேன்
மாவரு மகளிர் மாலைக டொடுக்கு
மயின்மலை வீரமா காளி 78

மாகத வடிவும்வச் சிரவல்லித் துகிலும்
முத்தா ரமு மகுடங்
காகமுஞ் சூலும் நவமணிச் சிலம்புங்
கண்டுளங் களிக்குநா ளுளவோ
காகநே ராடித் தளத்தினற் கல்வி
பயிலிளங் காளையர் நடனத்
தாகமுர்ந் திடவிந் துதித்ததென் றும்ப
றுளிர்குன்றை வீரமா காளி 79

உன்னரு ளெனக்கு ளுண்டெனி னுலகி
னொன்றையு மோம்புகே னோம்பி
னென்னரு ளுடையே னிதுதரா செனுமீண்
டேற்குமோ யேற்குமா றியம்பாய்
பொன்னவ மணியாற் குயின்றபூஞ் சிவிகை
கோபுரத் தளியின்கூண் டெனவே
மன்னவெண் மேழந் தளம்புடை சூழ
வருங்குன்றை வீரமா காளி 80

பொருணாசை மலையிற் பெரிதுபெண் ணாசையிப்
புவனமேழ் கடலினும் பெரிது
தெருளுடம் பாசை செப்புதற் கடங்காச்
சிறியனேன் றிருத்தியென் றடைவேன்
அருளடைந் தமைந்தா ரானந்தம் போலு
மாழியாத வன்மழை போலு
மருளற விளங்கும் நிலவதைப் போலும்
வளர்குன்றை வீரமா காளி 81

சர்வவல் லவியாந் தாயேநின் சரணஞ்
சார்ந்ததன் பின்னுமுன் வினைநோய்
கர்வமுற் றெனைவந் தணுகவும் படுமோ
கடையனேன் கவலைதீர்த் தருள்வாய்
பர்வத வரசி பவளச்செவ் வாய்த்தேன்
பட்டுடை நனைப்பழுத் தமிடும்
பர்வமா யுதித்திப் பாருய வளர்பொற
பதிக்குன்றை வீரமா காளி 82

உன்னருள் படைத்து மொப்பிலாத் தொழிற்று
முயர்ந்தமா பெரியர்தம் மாபிற்
சின்னயான் சனித்து முன்னையும் பணிந்துந்
திகிலொடுந் திகைத்துவா டுவேனோ

மன்னவன் மகுட பந்தியிற் சிலம்பார்
மலர்ச்செஞ்சிற் றடிநடம் புரியத்
தன்னிரு கரத்தாற் றழுவவீற் றிருக்குந்
தனிக்குன்றை வீரமா காளி. 83

உள்ளமு மனமு முலைந்துலைந் துருகி
யுனதுநல் வரவெதிர் பார்த்தே
வெள்ளமா யிருக ணீர்புரண் டோட
விம்மிநின் றறற்றல்கண் டிரங்காய்
வெள்ளிமா மலைபோல் விளங்குமே டைகண்மேன்
மிளிர்நவ மணிப்பது மைகள்போற்
பிள்ளைக ளடிக்கும் பெருங்குன்றக் குடியெம்
பிராட்டியே வீரமா காளி 84

உன்னரு ணிலத்திற் றுள்ளமா வரும்பி
யுபாசனை காய்த்துனல் லறிவாய்
மன்னுதீங் கனிக்கு விசாரணைக் காவல்
வைத்தும்வன் பொறிபுலன் வழித்தா
யுன்னகக் கவிபாய்ந் தபகரித் திடினென்
னுளைப்பெலா மவலமா மாலென்
னன்னையுன் கடை நோக் கனுதின முதவி
யருள்குன்றை வீரமா காளி 85

வாய்மதந் தனுவாய் மதத்தினு லெவரு
மலைக்கவெவ் விடத்துமெத் தொழிற்கும்
தாய்மதத் தானு னென்றிறைந் தேய்த்துந்
தனம்பிடுங் கூமர்கூட் டெதர்க்காம்
பாய்மதப் புகர்க்காற் கந்துகந் தாவிப்
படிகிடு கிடுவெனக் கனைத்து
வாய்வெனப் பறந்து வானுறக் குதிக்க
வருங்குன்றை வீரமா காளி 86

உளமெனும் பீடத்திருத் தியன் பலர்தூய்த்
துருவையா வாவாவென் றோதிச்
சளமெனு மனதைப் பலிக்கொடுப் பவர்முன்
சடுதியில் வருந்தயா பரியே
குளமெனு மொழிப்பூங் குஞ்சியிற் புனைதார்
குப்பியுங் குழலிக ளவிழ்த்துத்
தளமெனுந் தெருவிற் சிற்றின்மேய்ந் தாடுந்
தனக்குன்றை வீரமா காளி 87

உரைப்பரி தெனமுன் னேருமுய்த் தமைந்த
வொன்றை யானின்றயா வதனுன்
மறைப்பறத் தெரிந்தா லன்றியென் மனமோர்
வழிப்பட நிற்குமோ தாயே
விரைப்பனி மலரான் மேய்ந்திடுந் திருக்கண்
வீதியிற் கதலியுங் கமுகும்
கருப்பழு மிளநீர் நுங்கும்பூங் குலையுங்
கமழ்குன்றை வீரமா காளி 88

மணிகிடந் துடிதுந் துமிபல வாத்ய
மறிகட லோசையி னெழும்ப
வணிகிடந் தொளிருந் திருப்பணி யதனி
லமரர்பூசையுங்கொளு மாசீ
மணிகிடந் தொளிர்பொன் வீதிக டொறும்பூ
மாநிழற் படியுமுப் பரிகைப்
பணிகிடந் தொளிரோ வியங்களின் பிரபை
படர்குன்றை வீரமா காளி 89

கம்பமில் கடலின் காகமே போலுங்
கனல்விர கெறும்பது போலும்
வெம்பியுள் வெதும்பி வெருண்டியான் புலம்ப
விட்டிடேல் விரும்பிவந் தருள்வாய்

கொம்பென நிமிரு முலைக்குட மிரண்டாற்
குளிரும்பூம் பொய்கைநீ துவர்கட்
கம்புயம் நாணுற் றங்கிங்கோ டுதல்போன்
றலைகுன்றை வீரமா காளி 90

வடிவநாற் பத்து முக்கோணம் பணித்து
மணிதொறுஞ் சத்திபீ சமதிட்
டடியினிற் கந்தன் கணபதிபீச மமைத்து
மேல்வடுகன் றுர்க்கையும் வைத்
துடனிரு வட்ட மிட்டுநால் வாச
லுவந்துவைத் துயருமூ வெழுத்தைத்
திடனுடன் செவிப்பார் சிந்தைவிட் டகலாத்
திருக்குன்றை வீரமா காளி 91

வரைநடு வரையைக் குறுக்கிடக் கீறி
மருவிநாற் சிரத்துஞ்சூல் சாத்தி
இரையுமீர் மேல்வீட் டினிநசி மசியு
மீரண்டுகீ ழறையிற் சிவாவென்
றுரையும்பொற் றகட்டிட் டம்முறை யறிந்தே
உருச்செயி னுக்கிர வடிவாய்
வரையினென் கணமு மருண்டுருண் டிடவந்
தருள்குன்றை வீரமா காளி 92

பிரணவ மெழுதி நடுவினி லசபா
பேணிமேற் சிவயந மாவென்
றிரணநற் றகட்டி னிறினால் விழியால்
எவர்களுஞ் செபித்து மெங்கேனுங்
கிரணமா யரணஞ் சூழினங் குளத்தைக்
கிருபையா யழைக்குமென் றருளுந்
தருணமங் கலையென் றாயுன்றாட் கமலஞ்
சரண்குன்றை வீரமா காளி 93

வெற்றிசே ருனது வீரதண்டை யந்தாள்
விரிமலர் சொரிந்துயான் றொழுவேன்
முற்றிரு வருணீ நல்கிநற் பவுசு
மோட்சமுங் கொடுத்தனின் கடனே
சிற்றிளந் தேஞ்சிட் டரிவையர் விழிகள்
சேலென வந்துமேற் புருவ
விற்றெரி வதனு லஞ்சிவான் புகுசீர்
விளைகுன்றை வீரமா காளி 94

சென்மத்தா னிருக்கும் ராசியான் பலத்தே
திரிகோண முச்சகேந் திரமாய்
மன்னத்தா ரணியிலு தித்தபுண் ணியரின்
மனத்துறை கனத்துறை மகளே
பொன்னைத்தா னூரத்திற் பொதிந்தமா லுந்திப்
பூவரு நாதனுப் பூவை
மின்னித்தா னிலங்கைந் திலக்கண வலுநர்
மிகுங்குன்றை வீரமா காளி 95

கூறுமீ ராறே னுச்சமா யவனிற்
கொடியர்கூ டிடவிழி யாதொன்
றுறுகோ ணமலா தைந்துகேந் திரமுற்
றவதரித் தவர்பெரு வாழ்வே
நீறுறுந் திருமெய் யடியவர் விடியும்
நேரமுன் லகிரிபா டிசைகேட்
டாறுறுமண லு முருகுமுன் னருளா
லடர்குன்றை வீரமா காளி 96

அயந்துரு சிரதந் தனிந்தனிப் பூச்சேர்த்
தறுவகைக் காரநீர்ப் புடமிட்
டியைந்தமுப் பூவீ திடுதல்கண் டிடுவார்க்
கிடரில்லை யுடற்கெனு மிறைவி

நயந்திடு மடியார் பகைவர்க்குப் பகைவீ
நடலைசெய் கொடியர் சங்காரி
பயந்திட வெழும்பேய் பிணிக்குலாந் தகியே
பசுங்குன்றை வீரமா காளி 97

ஆமெனு மூமை யறிந்துயா மெனுமீ
ரட்சரோஸ் வாசகிஸ் வாசிப்
போமெனுஞ் செவியி லுரைத்தெனக் கருள
வுயர்குரு வடிவெடுத் தவளே
தேமெனு நதிநீ ராடாம் பயர்பூண்
டிாள்முலைக் களபமுங் குழலுந்
தூமெனுந் துகிலும் நாதனே ருலைத்துஞ்
தோய்குன்றை வீரமா காளி 98

எழுதுசித் திரநன் கிலங்கிடக் கருங்கோ
டிடுதனே ரிற்சிறப் புறவோர்
பழுதறு மனையாள் வாய்த்தவள் ளுவர்போற்
பாக்கிய முறினிதிஞ் சுகமேற்
றெழுதவ வனலைக் குண்டலி யதினின்
றேற்றியா யிரத்தெண்பூ மிதழ்த்தார்
கெழுதனி மதிப்பா லுண்சுக மெனுமெங்
கிளைக்குன்றை வீரமா காளி 99

செல்வமுஞ் சீருஞ் சிறப்பும்நற் புகழுஞ்
சித்தியு முத்தியுஞ் சுகமுங்
கல்வியு முதவிக் கனவொடு நனவிற்
காட்சியுங் கொடுத்திடர் தவிர்ப்பாய்
நல்வர மருளு ஞான நாயகியே
நாடொறுஞ் சிலம்படிப் பதுமம்
வில்வமிட் டருச்சித் தேற்றிப்போற் றுவனெல்
விளைகுன்றை வீரமா காளி 100

முளங்கறு காற்றேன் விருந்துண்டார் சவிவான்
மூவர்சொன் மாலையும் புரடோட்
களங்கறுங் குதலைக் கனிமொழி மதலாய்
காவிலி னூற்றுங்கட் டுணையே
வளங்கருங் கொடிமே யடவிமல் கேன
மருப்புழுஞ் சாலின் மீத்துவைத்த
துளங்கறு நிதிச்சொம் பாதிய வெழும்புக்
துறைக்குன்றை வீரமா காளி 101

உலகுயி ரனைத்தும் பிரமசா காத்தி
ஞேங்கலை நுரையென வுதித்தாங்
கிலகதி னொடுங்கு மென்னயா னிலையென்
றெதனைப்பற் றுவனெதை விடுவேன்
கலவிசெய் பருவக் கடிகொளா ரகத்தைக்
காட்டிவே டுயர்செயக் காய்ந்த
வலகினு லடைந்த குறையைவெண் மதிகாட்
டறக்குன்றை வீரமா காளி 102

விரும்பிருஞ் சுவர்க்க வின்பமு மிகத்தே
விரியும்பல் வகையின்பு மசதுதென்
றரும்பரா பாத்திற் காண்பவன் காட்சி
யகன்றிடப் பயிற்றுநா ளுளவோ
குரும்பையுங் குருத்தும் பாளையுங் கமழுங்
கோட்டமில் தென்னையந் தோகை
யரம்பையர் குழலாற் றுவதெனத் ததும்பா
றமைகுன்றை வீரமா காளி 103

அண்டகோ ளகைக்கு மப்புறந் தழீஇநின்
றுயிரங் கோடிசூரி யர்போற்
கண்டகண் காட்சி தன்னினீ யுரைத்த
கருத்தையெங் ஙனம்வெளி விடுவேன்

பண்டபாத் திரங்கள் பான்முழு மதிபோற்
பல்கதிர் பரப்பமின் னிழையா
ருண்டிசெய் மணத்தாற் சுரும்பவா யூறி
யுரைகுன்றை வீரமா காளி 104

ஆற்றுகே னினியோ ரல்லற்கெம் மகத்தி
னடைவெலா மனுவெனுங் கரவா
தீற்றுணப் போலீண் டளிக்குந்தாய் திருமுன்
னியம்பினேன் சுயம்பிர காசி
காற்றன னீர்வா னிலமுமில் பொருளைக்
கர்த்துருத் துவமறக் காட்டித்
தேற்றனின் கடனே வாணிபொன் பாங்கர்
தெருள்குன்றை வீரமா காளி 105

சின்மய முறநாற் சாதனத் தொன்றிற்
றேர்ந்தருட் சகசநிட் டையைச்சார்ந்
தென்னையிவ் வுலகத் துள்ளுமிவ் வுலகை
என்னுளுங் காண்பறக் காணக்
கன்னிநீ யுரையா துரைப்பதென் பதுங்கைக்
கனியென விளங்கவைத் தருள்வாய்
மன்னுமைங் கோசப் பாழ்மனங் கடந்தார்
வாழ்குன்றை வீரமா காளி 106

பண்டைவா சனையும் பயமுஞ்சந் தேகம்
பாவனை யாவையும் விடுத்துக்
கண்ட கோலமே குருபத மெனக்கொளுங்
கருத்துவந் துதிக்குநா ளுளவோ
உண்டவேல் விழியார் பழமென வெறிந்த
வுயர்மணிக் கோவைகள் சிதரி
வண்டருக் குலகவாழ் வைக்காட் டுதல்போன்
மலிகுன்றை வீரமா காளி 107

அலைநுரை குமிழி யாதியெங் குதிக்கு
மாழியொன் றில்லையே லதுபோ
னிலைதரு முலகம் பிரமமன் றெனநா
னீங்குவ தெங்குமா தாவே
சிலைமுடி யிலங்குந் தீபத்தின் பிரபை
செகத்தவர் சிந்தையி னிருளை
விலகெனப் புடைத்தல் போலும்வீழ்ந் தெழுந்து
மிளிர்குன்றை வீரமா காளி 108

கையிலா னுயா மதுகண்ட விதமாங்
களிப்பொடுன் றளியினின் சகுன
மெய்யினு மால்கொண் டருட்குரு மொழியால்
விரும்பிடார் நிற்குணத் தவமே
மையிலா மடவார் மலர்ச்சடை முகமும்
வயங்குதன் மதிதனை யரவம்
பையவாய் விழுங்கச் செல்லல்போற் றிகழும்
பரங்குன்றை வீரமா காளி 109

திடம்படத் துறவா னகத்திற்புண் ணியத்தாற்
றேசுடைப் பொருடுலங் கிடினு
முடன்படற் கறியா னஞ்சுவான் குருவா
லுளமலைப் பறப்பெறு னெனினச்
சடம்படு ஞானந் தனிமுகில் புயலாற்
றகர்தல்போற் றவிருமென் றருளு
மிடம்படு மிலைவேற் கரவுதா ரணியெம்
மிறைகுன்றை வீரமா காளி 110

தன்மய மனைத்து மென்றுண ராமற்
றன்னைவே றுகக்கண் டவர்க்குச்
சின்மயப் பொருடான் வானும்பூ மியும்போற்
றிகழுமெங் கைக்கியம் பெறுவார்

தன்மனை யிருக்கப் பிறமனை விழையுந்
தன்மையான் வருமவ தூறை
நென்மனைப் புறங்காய் களைகள்காட் டுவிக்கும்
நிதிக்குன்றை வீரமா காளி 111

அல்லொடு பகலு மகநிலை யுலையா
தச்சமற் றுலகுயா னதுவென்
சொல்லையு சாவிப் பாசுகக் கடலிற்
றோற்றமற் றிருக்குமநா ளுளவோ
நல்லவர்க் குதவார் திரவியம் பலவாய்
நசித்திடு மென்றகட் டுரைக்கோ
ரெல்லையா யீமப் புதரின்பூஞ் செடிக
ளெழுங்குன்றை வீரமா காளி 112

தெருவில் வந் திடுவித் தையன்மெய் யன்னவனாற்
செயப்படும் வித்தைபொய் யெனல்போன்
றருவுரு வாய்த்தோன் றமலமெய் யதிற்றோன்
றனைத்தும்பொய் யாமனுட் டானக்
குருவிலான் ஞானம் பயன்படா தெனுமக்
குறிப்பைவேட் டுவன்வலைப் படுபுட்
டருவிலன் றீன்ற வண்டங்தோற் றுவிக்குந்
தலைக்குன்றை வீரமா காளி 113

சங்கற்ப விகற்பந் தவிர்ந்தபே ரறிவாய்ச்
சச்சிதா னந்தசிற் சுகமாய்ப்
பொங்கித்தான் றதும்பிப் புவனமேழ் கடலும்
பொருமுமா பொருளைஎன் றறிவேன்
எங்குசென் றிடினு மருட்கவிப் புலவோ
ரிசைந்துப் சரிக்கப்பெற் றிடலைப்
புங்கமார் சுவர்ணத் தோவியம் புகட்டும்
புகழ்க்குன்றை வீரமா காளி 114

சத்திய ஞான னந்தமுத் தியையான்
சகசநிஸ் காமிய தவத்தான்
மெத்தியா ரோபம் விலகபரோட்ச
வித்தைகற் றிருக்கும்நா ளுளவோ
தத்துவ ஞானத் தவமிலான் வேடந்
தனைக்கொடு ஞானியென் றலையும்
பித்தையல் லவைக்கூத் தாடிகள் விளக்கும்
பெருங்குன்றை வீரமா காளி 115

இல்லையென் றிரப்பார்க் கில்லையென் னாதீந்
திதயமும் புறமுமோர் படித்தா
யெல்லையற் றிலங்குன் றிருவருண் மயமா
யிருந்தெனைத் தெரிந்துய்நா ளுளவோ
முல்லைவா ணகைப்புன் முறுவலார் கமல
மொட்டென முளைத்தபூண் முலைசாய்ந்
தொல்லுமென் றயனெஃ காணிவைத் தனனென்
றுரைகுன்றை வீரமா காளி 116

வான்மழை நிறமொன் றாயினு மதுவீழ்
மண்ணின்வேற் றுமையடைந் திடல்போ
லூன்மலி பெரியோர் சிறியோர்பக் குவம்போ
லுட்கலந் தொளிரும்பே ரறிவை
யான்மலை யாம லருளும்நா ளுளவோ
யாழினு மினியசொன் மடவார்
தேன்மழை பொழிந்தென் னிசைகள்பா டகஞ்சூழ்
திரக்குன்றை வீரமா காளி 117

உள்ளமா தகழி னுணர்வினெய் பெருக்கி
யுயர்மனத் திரியிட்டா ராய்ந்தெள்
ளுள்ளிய நெருப்பிட் டறிவெனுஞ் சோதி
யோங்கநான் காண்குநா ளுளவோ

வள்ளமா விணைப்பூண் சித்திரக் கருங்கண்
மணிமுலை மாரன்றே ரகமுங்
கொள்ளைகொண் டெழும்பூங் கொடிகள்சூழ்ந் திடவாழ்
குணக்குன்றை வீரமா காளி 118

தவளமும் மதப்போர்ப் புகர்முகக் கரியூர்
சசிமன்ற னகத்துஞ்சா வெனுந்தீ
துவளவாட் டிடுமேற் சுகமென்றோர் பதவி
துறக்குமாத் துவிதமற் றுளவோ
பவளத்து ளிளம்பா னிலவுதித் தனவிற்
பாவுபுன் முறுவலார் கனகக்
கவளமுத் திரைப்பூ டணமுலைக் களபங்
கமழ்குன்றை வீரமா காளி 119

மனமெனுங் கவியை நினதருள் வாளான்
மடித்திடிற் பொறிவழிப் புலனும்
சினமெனு மகந்தை யாதியும் பரிதி
தெருளிடத் திருளெனக் கெடுமே
தனமெனுங் கிரிமேற் கட்கடல் சுழலத்
தாமரை யிதழின்மெல் லடியார்
தினமன மெனப்பொற் குடங்கொண்டு றுணிகட்
டிரிகுன்றை வீரமா காளி 120

எனக்குமன் னியமொன் றில்லையென் றிருக்க
வென்னுளே யென்னையுன் னருளான்
வினைக்குழா மொளிய விசாரித்தா னந்தம்
விளையுங்கை வல்லவீ டளிப்பாய்
றனக்கொன் றன்னியர்க் கொன்றோர மாய்வளக்கிற்
சாற்றுவார் குலங்கள்போம் வழியை
புனக்கறைப் புளிபுங் கிலைகள்காட் டுவிக்கும்
புன்றகுன்றை வீரமா காளி 121

சழக்கர்கூற் றுடைத்திச் சாதிபே தமெலஞ்
சருவமுந் தனதுயி ருடலென்
றழக்கும்நல் லறிவார்க் கில்லையோ வவர்க்கின்
பரிதெனும் பெரியநா யகியே
பழக்கமில் குருவைப் பற்றியாண் டொருவன்
பாபதம் பெறவினு விழிவைப்
பழுக்குமென் றிலவார் பார்ப்பறி வுறுத்தும்
பழங்குன்றை வீரமா காளி 122

அட்டமா தியசித் தனைத்துங்கை வரினு
மாசையென் குறளிரு வினைவெங்
குட்டமீ தமிழ்த்திக் கொலுமென வழியாக்
குருபதங் கூட்டிவைத் தவளே
இட்டமா னவர்தன் புறக்கண்டு முதவா
திதமகி தம்பகர் கொடியோர்
முட்டுவாழ் வினைமுண் முசூர்மரங் காட்டூர்
முடிக்குன்றை வீரமா காளி 123

துன்றுசாக் கிரசொப் பனசுழுத் தியின்மேற்
றுரியமுஞ் சிவோகமென் றகந்தேர்ந்
தொன்றுமில் துரியா தீதத்திற் புனலுப்
புறவென விரவுநா ளுளவோ
தன்றனஞ் சிறிதுந் தருமஞ்செய் துவக்கான்
சதிகொலை காரன்பின் பெறுநோய்
பொன்றலைப் புழுமேயெருக்கறி வுறுத்தும்
புரிகுன்றை வீரமா காளி 124

பொன்னும்புன் னோடுஞ் சமமெனப் பார்க்கும்
பொறையறி வாளிகள் புகழ்ந்தாழ்ந்
துன்னருள் கொழிக்கு முறைவிடத் தொன்று
யுலுத்தனு னுதிக்கப்பெற் றிலனே

தன்னையம் விலகத் தருமத்தை கனவு
தன்னினு மறந்தவர் கதிபோன்
மின்மினிக் காண்ட கவிகள்காத் தொறுங்கண்
விழிகுன்றை வீரமா காளி 125

சொல்லைவைத் திலங்கும் வேதசூத் திரமுஞ்
சுருதியு மவுனமாய் முடிக்கு
மெல்லையி னும ரூபமில் பொருட்சார்ந்
திரண்டறக் கலக்குநா ளுளவோ
இல்லைவேண் டாமென் றிழிந்தும்நாச் சுவைவேட்
டெயிறுறக் காட்டுவார்க் கவர்வாழ்
வில்லையுண் டெனும்பேர் நாணுற வுடன்காட்
டியற்குன்றை வீரமா காளி 126

வண்டெனத் துளைக்கு மீசனுத் திரய
மமதையா லுள்விழி மயங்கிக்
கண்டெனப் பவஞ்செய் வினையிற்கா முறுமிக்
கலியனேன் மெலிவுநீத் தருள்வாய்
தொண்டரைச் செருக்குந் துட்டர்நெஞ் சுதிரந்
தோய்ந்துசெந் நிறம்பெறுஞ் சுடர்ச்சூற்
கொண்டெழுந் தருளெங் குலப்பெருந் தெய்வக்
கொடிகுன்றை வீரமா காளி 127

குண்டலி யுனைத்தஞ் சென்னியூ டிருத்திக்
கொடுங்கன்ன மூட்டுமா தவர்க்குச்
சண்டனு மொருதத் தபடம்போல் வானேற்
றுலத்தார் தயவும்வேண் டுமதோ
எண்டிசைக் களிறும் பிளிறித்தன் னிலைவிட்
டிடாரிப் படர்முடிப் பிடரிற்
றண்டைவெண் டையுங்கிண் கிணீமென நடிக்குந்
தளிக்குன்றை வீரமா காளி 128

வெந்தச குணப்பி ராந்தியே சனைமால்
விட்டுநாற் காணமைங் கோசத்
தொந்தமுந் தொலைந்தப் பாழுக்கப் பாலாய்
சுகிப்பதென் றுலெவர்க் கெளிதோ
கந்தமு மலரு மெனவுயி ருலகுங்
கலப்பறக் கலந்து கண்டவர்க்குச்
சந்தத மெளியாய் தருக்கிளர் மயின்மாத்
தயாநிதி வீரமா காளி 129

மனத்தினு னினைத்து வந்திடிவ் வுலகும்
மானதபூசை மந்தி ரமு
மனைத்தினு தார சத்தியுன் னருள்கொண்
டறவிசா ரிக்கும்நா ளுளவோ
பனைத்துணைக் கிடைகள் படாக்கூ னெயிற்றுப்
பவளவாய்ப் பெருந்தலைக் கணங்கள்
கனைத்தெழுந் தடியிற் கவிழ்ந்துதோத் தரிக்குங்
கனக்குன்றை வீரமா காளி 130

இகழ்து புகழ் தென்றநேர்க் கெமக்கு
ளெழுமள விரண்டறக் கலந்தூற்
றகழியின் மலரு மணமுநேர் நீநா
னவனெனு வொடுக்கம்வந் துறுமோ
பகழியைப் பழியம் பகப்பழ மொழியார்
பானுவைப் பகைக்குமட் டோட்டோ
டமழிகொண் டுறப்பூந் தொட்டிமுரட் டிசையோ
டசைகுன்றை வீரமா காளி 131

சனிப்பெனும் பவத்திற் பிணிப்பெனு மலைமேற்
றருக்கெமப் படவனேற் றிவைத்த
வினிப்பெனுங் குடும்ப பாரமாம் பொறிப்பட்
டேங்குநா ளிரங்கிவந் தருள்வாய்

பணிப்பென லறியாப் படித்துண ரடியார்
பரிமளத் திருவெண்ணீ றணிந்து
தனிப்பெனுங் குடில்க டொறுந்தவம் புரியுந்
தகைக்குன்றை வீரமா காளி 132

வானும்வை யகமும் வணங்குதென் பனையூர்
மாமுனி வாக்குமுன் வாமுந்
தானுந்தன் னிலைசார் தவமுங்கொண் டுயரென்
சற்குரு முத்துசா மியின்றுள்
யானுங்கொண் டுரைப்ப தன்றியோர் மகவா
யாமுறப் பெற்றபே றுனது
தேனுந்து மலர்ச்சே வடிகொள்சீர் பெற்றேன்
ஜெயக்குன்றை வீரமா காளி 133

தடையிதென் றுயர்ந்தோர் தவிர்த்தவா னுவ:மாஞ்
சர்ப்பமென் றவத்தெழு மதியைப்
புடையெனும் நவவாய்ப் புதரினின் றெழுந்து
புசித்திடா வண்ணவந் தருள்வாய்
விடையின்றிண் டிமிழ்போல் விளங்கிலிங் கேசர்
விநாயகர் வெற்றிவேற் பெருமா
னடைவுட னுலகுக் கருள்செய்வா னமரு
மமுற்குன்றை வீரமா காளி 134

கடையவ னெனையுங் கருணையங் கடலுட்
கலந்துதன் மயமெனக் கவிந்தா
ளுடையவ ளுனக்கிவ் வுதவிக்கோ ருதவி
யுய்த்துணர்ந் தாற்றுமா றறியேன்
படையெடுத் தனமுற் பாய்ந்துழக் கிருண்மொய்
பழவினைக் குழுவிழுந் தோடு
நடையுடைப் பெரியோர் நாவகங் குடிகொ
ணலக்குன்றை வீரமா காளி 135

படமுடி யாது மிடிமையின் னழும்யான்
பறந்துழன் றலைந்துபொன் றேடிக்
கெடமுடி யாதுன் கிருபையென் றுகொலோ
கிட்டுமென் றேங்கனீ யறிவாய்
விடமுடி யாதென் றளிமுரல் மதுர
மென்மலர்த் தாமபொன் முடிசேர்
சடைமுடி யுடையாய் தளர்ந்தனந் தழீஇயாள்
தனிக்குன்றை வீரமா காளி 136

பெற்றவ ளிருக்கப் பிள்ளையான் வெதும்பிப்
பிறர்கைபார்த் துடல்வளர்த் தலைந்தான்
மற்றவ ளுனையும் நகைப்பளென் றுனக்கு
மனம்வரா திருந்ததென் வினையே
சற்றனை கடைக்கட் பெற்றவர் பெருமை
சாற்றுதற் கரிதெனப் பெரியோர்
சொற்றசொற் குறுதி யென்கொலோ துயர்தீர்
துணைக்குன்றை வீரமா காளி 137

கண்ணின்மை யெழுதிக் கமழ்தொடை சாற்றிக்
கல்லென வழுதுபூந் தேரிட்
டெண்ணில்வாத் தயத்தோ டிமங்கொண் டேறவோ
ரிருகைமண் ணிடுமுனைட் கொளுவாய்
பண்ணவன் பயில்யாழ் பழகுமின் றீஞ்சொற்
பருவத பத்தினி மகளே
திண்ணனெச் சிலையுண் சிவனகம் மகிழ்ந்துஞ்
செயற்குன்றை வீரமா காளி 138

விரும்புகே னினைவிட் டொருவர்சொன் மயக்கான்
வேறொரு தெய்வமுண் டெனவே
அரும்புபூ மலர்காய் கனியெனத் தாம்போ
லண்டபிண் டமும்நிறைந் தடியார்

கரும்பென வியக்குங் கதிச்சுக மளிக்கக்
கருணையோ ருருவெடுத் தருட்டாய்
தரும்பிதா வினுமன் பெனவுல குவக்கத்
தளிர்குன்றை வீரமா காளி 139

பவப்பழு தறநிற் பாடியா னந்த
பாவச மாகநின் றுருகி
யவப்பொழு தணைத்துந் தவப்பொழு தாய்க்கொண்
டலக்கணற் றிருக்குநா ளுளவோ
துவப்பிலை சுணம்போன் மூவருங் கூடத்
தோன்றுமின் சாரஞ்சத் தியதென்
றுவப்பமா தவர்நிற் பெறினெலாம் பெறுமென்
றுரைகுன்றை வீரமா காளி 140

கதமொரீஇ நிறுவுங் கட்டுரைத் துணியாற்
கடையனேன் கவலைவிட் டொழிந்து
மதமொரீஇ நிறுவுன் வாழ்க்கை பெற்றிடத்தாண்
மலர்மொரீஇப் புகழுநா ளுளவோ
புதமரீஇ வயங்கும் பொன்னவ மணியின்
பொருப்பென னென்னவ தான்யம்
நிதமரீஇக் குவியுங் களத்தினித் திலங்க
ணிவர்குன்றை வீரமா காளி 141

ஒன்றிலொன் றுதிக்கு முழவுடை யுலகத்
துருவின்மாள் பற்றிநின் றுழல்வ
தன்றியீ தெதனு ரோபமென் றகந்தே
ரறிவிலிக் கருளுநா ளுளவோ
குன்றிடா தெழுஞ்செஞ் சுயம்பிர காசக்
குன்றமே குறைவிலா நிறைவே
என்றியா மனமற் றிருப்பதென் றடியா
ரிறைகுன்றை வீரமா காளி 142

கர்த்தனும் பேதங் கழிந்துளந் தெளிந்தார்
கண்வளர்ந் தமலமா யிலங்கிக்
கர்த்தவி யத்தா லுலகினைப் புரக்குங்
கதிரவ னுதிக்குநா ளுளவோ
அர்த்தமா தவனி யாதியா மயக்க
மறுக்குந ரிருக்குமூர் தோறும்போய்
நர்த்தனம் புரியும் ஞானநா யகியோம்
நமோகுன்றை வீரமா காளி 143

ஆசையாங் கனலி லகந்தையாம் வளிவா
யகமெனுஞ் சருகுவீழ் தெரியா
தோசையாஞ் சாண வாரிசஞ் சிரமேற்
றுளம்வெளிப் படுநன்னா ளுளவோ
காசையே கதியாக் கருதிநின் னினைவைக்
கனவினு மறந்தவர் பெருந்தன்
பீசையோ ககபத் தமிழ்ந்தறி வுறுத்தே
ரிழைகுன்றை வீரமா காளி 144

யாதும்வேண் டாமென் றொருத்தடைந் தனர்முன்
யாமொரு நாயினுங் கடையேம்
போதுமென் றமையாப் புலையனுன் மீது
புரைசொலிப் புலம்புதல் வளக்கோ
காதுகே ளாள்போ லிருக்குமுன் கருத்துங்
கண்டுகொண் டேனிருப் பினும்நீ
வாதுசெய் திடில்யான் பொறுப்பனோ கருணை
வளர்குன்றை வீரமா காளி 145

ஒன்றிற்பற் பலவா யுலகெலா முயிர்கொண்
டுலவுமுன் னருளினு ளாளக்
கின்றைக்கென் றலையாச் செல்வவீ டடைவ
தென்றென்றே வருந்துநா ளுளவோ

கன்றைத்தாய் கருதி மடுச்சரந் தெதிர்போய்க்
    கலக்கவக் கன்றகன் றகன்று
நின்றதெரத் திடுமும் நம்நிலை யெனவான்
    நினைக்குன்றை வீரமா காளி 146

விம்பநேர் விளங்கிவ் வியனிலம் நிலவு
    மெல்லியர் கலவிக்கள் ளயின்று
பம்பரத் ததிகஞ் சுழலுமென் கொடுமை
    பயிர்ப்பறப் பகாவும் படுமோ
தம்பம்விண் ணுருவித் தளைத்தொளி பரப்புந்
    தமனியப் பீடவெண் டிசையும்
நிம்பமா கடம்பப் புனைநிழல் குளிர்சந்
    நிதிக்குன்றை வீரமா காளி 147

மட்கிடை வளரும் பிள்ளைப்பூச் சியுமோர்
    மலிவெண்ணை புளியெனக் குடும்பத்
துட்கிடா துறவுற் றுறுமனத் துறவி
    னொழுக்கமெற் களிக்குநா ளுளவோ
கட்கடை விரும்புங் கனக்கவி ராசர்
    கட்டியங் கூறவான் வணங்க
வட்கினி திசையான் வாணிபொன் னூச
    லசைகுன்றை வீரமா காளி 148

அடைவதற் கரிய பிறவியா னடைந்து
    மம்மையும் மருமைமெய் மலர்த்தாள்
சடைவறத் தொழுதற் கறிகிலேன் றளர்ந்தே
    தத்தளித் துன்றளிப் புகுந்தே
நடையுறக் கிடந்து மோலமிட் டலரி
    நணுகினேன் றுங்கிக்கொண் டருள்வாய்
தடையறச் சுகன்சம் பந்தனுக் கமுதந்
    தருங்குன்றை வீரமா காளி 149

காலமுந் தூல மூன்றுஞ்சன் மாழிக்
கல்லேரல மெனவரு மளவு
மேலமும் மலமுக் குணபரி பாக
மெய்துமோ வைந்தவத் தையும்போங்
கோலமா யிலங்குங் குருவடி வுடனெங்
கொழுமனக் கோயில் கொண்டிருக்குஞ்
சீலமா தவசிந் தாமணி விளக்கே
சிகிமலை வீரமா காளி 150

கோள்களாந் திரைகள் சூலைத்தலைத் தொதுக்குங்
குவலயக் கடற்பிறந் தவர்வாழ்
நாள்களா னதிலோர் நாழிகை யெனுந்தன்
னுட்டஞ்சித் திரவிளக் கெனப்பூந்
தாள்களா தரிக்குந் தவம்பெற்றார் பெருமை
சததசத் தலைப்பணா சொலொணா
வாள்களா மெனின்யார் வரையறுத் துரைப்பார்
மயின்மலை வீரமா காளி 151

புகழுறுங் காளிப் புலவர்கோ வியக்கப்
புகட்டுபொற் கிண்ணமூட் கழுவு
மகழியி னீரு மருந்துவா னெமக்கிங்
ககப்படுந் தவப்பய னிலனே
சகளநிட் களமாய்த் தழைத்தெழுஞ் சோதி
தண்டலைப் பொழின்மது சொரியத்
திகழளி துயில்வ கருங்கடன் மழைபோற்
றெரிகுன்றை வீரமா காளி 152

அயின்றிடுங் கவளத் தொருசிறி தயரி
னத்தனை நன்றியு மறந்தாங்
கியன்றவன் றனைக்காய் கரியெனத் திரியா
தெத்தனை யிடுக்கணுற் றாகினும்

பயின்றவோர் நன்றி குறித்தினு விடுநாய்ப்
பரிவுமிக் கெருவிகொண் டிலனே
துயின்றதென் றளிக டொடக்கவி சினந்தார்
தொடுக்குன்றை வீரமா காளி 153

அருங்கல மாடை யழகுறப் புனைபெண்
ணணங் கினங் கூம்புறு காராய்
மருங்கல மறப்பூங் கொண்டைதோள் புரள
வலம்வருங் கோயிலூ ழியமே
யிருங்கல மெனக்கொண் டிசைபணிக் கணத்தொன்
றென்னயா னெண்ணுநா ளுளவோ
குறுங்கலை மிதித்த கோடுகூ லுகுத்தூர்
குளக்குன்றை வீரமா காளி 154

புனைந்தசெந் தாளம் பூவடி வரியோன்
பொக்கிஷங் கிடைக்கப்பெற் றமைபோ
னினைந்துளங் களிக்க நினதருட் சோதி
நிலைபிர சன்னமா காதோ
முனிந்துமந் திகள்காய் கனிசிதைப் பதனுன்
மோடுறும் விரைவயற் புரந்தே
னனைந்திலை தளிர்த்து வேலியாய் நனிவாழ்
நயக்குன்றை வீரமா காளி 155

கோதையைக் கோதிக் குறுநடை யொடும்பூங்
கொடியென வளியுலா வழிப்போம்
பேதையர்க் கிரவு பகலும்நெஞ் சுருகும்
பேயனின் பிறவிதீர்த் தனையே
னீதையெற் கியம்பென் றுனைச்சுளிப் பாரா
ரிரங்கிலா யிருங்கரிக் கோட்டான்
மேதையைக் கடவிக் கவிகள்கான் காக்கும்
விறற்குன்றை வீரமா காளி 156

பச்சிலை யிடினும் பாடினும் நினைந்து
பணிகினும் பாபத மளித்திண்
டெச்சிலை யினுந்தோய்ந் திருதயக் குகைக்கு
ளிருந்துமுத் தொழினடாத் திறைவி
குச்சிலை யிழிந்து மனைபுகும் பூத்த
கொம்பனை யார்கணை நோக்கிக்
குச்சிலைப் புருவங் கொடுமதன் வேட்டை
கொளுங்குன்றை வீரமா காளி 157

தேவர்தூ வகமுஞ் சூரைகொள் வரிச்சேற்
செவ்விழிக் கனிமலை துவர்வாய்ப்
பாவையர் தூவிப் பாப்பல மணமேற்
பயிற்றுமாற் கள்வெறி விடவே
மூவர்தாங் கிணைத்தாண் முண்டகங் குருகி
முகக்கிலேன் றெளிபும்நா ளுளவோ
பூவையுங் குயிலு மயிலனம் போத்தும்
புகுங்குன்றை வீரமா காளி 158

கடுங்கொலைக் காலன் கண்ணியுட் படுமுன்
கமருகு மமிழ்தினுள் ளுருக்கப்
படுங்கொலை விழியார் பாதையில் லடியார்ப்
பழகுநர்க் கூட்டியூ தியந்தா
நடுங்குலை கவரி வீசன்மின் னார்கை
நளினமென் றன்னம்வந் திரங்கி
யொடுங்கொலி வலைப்பட் டோடிமீள் வதுபோன்
றுலீகுன்றை வீரமா காளி 159

உரைப்பறும் பிறப்பி னைவழித் தடக்கி
யுமைத்துறந் திடுமுன்வீ டோம்பி
விரைப்பாஞ் சோதி விளைபதம் பெறுவான்
விரைத்தனங் குறிப்பறிந் தளிப்பாய்

நரைத்துவர்க் காற்பிட் பனங்கிழங் கனவாய்
நாரைக ணற்குளத் தளைவ
திரைத்தெழு நுரைபோ லிலங்குபின் பலைபோன்
றெழுங்குன்றை வீரமா காளி 160

வீங்கெயிற் றினராய்ச் சிகைவெழுத் திதழ்வீழ்
விருத்தம்வந் துருக்குலைத் திடுமுன்
மாங்குயின் மிழற்றுன் வாகவிப் புலவோர்
மாபுழிப் புகுவர்கொல் வினையோர்
தேங்கயத் திவலை தெரிக்கநத் தளியுஞ்
சீறவிப் பிகண்மணிச் சினைகொண்
டோங்கமீன் றுளவோ திமங்கள்வந் திரங்கூ
ருணிக்குன்றை வீரமா காளி 161

கெழும்புக ழிடம்பு கிட்டுமா றனது
சீர்த்திவிண் டுனதுமந் திரம்நாத்
தழும்புற வோதித் தவப்பெருஞ் சோதி
தனைத்தரி சித்தும்நா ளுளவோ
கொழும்புனத் துறங்கு ஞாளியை கவிகாய்
கொண்டெறிந் திடக்குரைத் தோட
வெழும்புள்தோ ரணம்போன் றெண்டிசை யினும்போ
மிதக்குன்றை வீரமா காளி 162

நாயினுங் கடையேம் விடையஞா னத்தா
னல்லவர் காணவுண் ணுறைப்
பேயினுக் கிருளைந் தவத்தைநீங் ககண்டப்
பேரின்ப வீடுவாய்த் திடுமோ
வேயினுக் காளு மதகரித் தடத்தில்
விழுமலர் மதுநிரை சுனையென்
றுயனத் துலவக் கிளிகணீ ராடி
யலைக்குன்றை வீரமா காளி 163

புதருலா வரவபூ டணும்பி கையுன்
போதகப் போதடிப் புணைசே
ரிதருலா வனத்தில் வீதியிற் குகையி
லில்லிலொன் றுகப்பெற் றிலனே
மதருலா விரத நிதம்பர்தந் நாதர்
வாரமையான் மனம்வெறுத் தெறிந்த
சிதருலா வலங்க றங்களா னனையுந்
தெருக்குன்றை வீரமா காளி 164

தலைவரு மதியம் போலவிவ் வுலகுந்
தரிசிக்கத் தானுங்கார்த் தளிக்க
மலைவரு முடிமே லிருந்துபார்த் தடியார்
மலைவறுத் தருண்மனேன் மணியுன்
நிலைவரு ஞானம் பெறுகிற்கி லேனு
னிரைவதே பெறுகிற்பே னல்லே
னுலைவரும் பிடைத்தே னுண்டுண் டுண்டென்
றுழுங்குன்றை வீரமா காளி 165

சிதலையு முராலுந் தேம்பனி மலர்த்தார்
தினந்தொடுத் துனதடிப் புனைவான்
முதலையெம் மனப்பேய் முதன்மையென் றாக்கி
முறைபிற ளாமன்முன் வருமோ
கதலியி னறுவர் பீருமோர் கடைவாய்
கண்டிடா தழுதவெம் பெருமான்
மதலையின் பசிதீர் மணிமுலை சுரந்தே
வருங்குன்றை வீரமா காளி 166

இந்தியக் களிற்றை ஞானச்சங் கிலிகோர்த்
திறுக்கிச்சிந் தனைக்கற் றாண் பிணைத்தே
முந்திய நினைச்சேர் முமுட்சடங் கிலிங்கு
முளைத்தபூந் தளித்தளம் படிக்கல்

கந்தியை பவனித் தெருவுளொன் றதுவாய்க்
கடையனேன் படைக்கப்பெற் றிலனே
சிந்திய லிசைப்பாச் சிறுவறுஞ் சுயமாய்ச்
செயுங்குன்றை வீரமா காளி 167

சகலமுந் தெரியும் ஞானத்தாற் றெரியுஞ்
சகமெலாம் ஞானகற் பிதமென்
றகலொணு ஞானம் பிரமமா மதுவே
யாமென வறியும்நா ளுளவோ
இகலின்வெற் றுரதோ ளிளஞ்சிங்கே றனைய
ரிடிமுளக் கெணக்குறங் கறைந்து
புகலின்போர்ச் சிலம்பந் தனுப்பயிர்ச் சிகளும்
புரிகுன்றை வீரமா காளி 168

சருவாதிட் டான சொரூபமாய் விளங்குந்
தனிப்பரப் பிரமத்தி னிடையே
நிறுவுமெப் பொருளும் வேறல நமது
நிஜவடி வெனவெணு ணவேன்
தருவுயர் கவிவான் புகையென்றம் புலியாஞ்
சட்டியிற் செக்காரந் தீயால்
வருவல்கொள் பொறியென் றுடுக்களைப் பொறுக்க
வளைகுன்றை வீரமா காளி 169

மறைமுடி விளங்கு நான்மகா வாக்ய
மர்மமுன் வரத்தினுற் றெரிந்து
கறையில்பே ரின்பக் கடந்தமெஞ் ஞானக்
கடலிடைப் படியும்நா ளுளவோ
பறவையி னிறகிற் பதைபதைத் தலையும்
பாழ்மன மறப்பெறும் பெரியோர்
துறவிலக் கணமூ வுலகுங்கேட் டுயச்சொல்
சுகக்குன்றை வீரமா காளி 170

களரொளி பரப்பி யாவையும் விளக்குன்
கிருபைவந் தணுகினிவ் வுலகோம்
பளரெனுங் குடும்ப பாரமென் செயுங்கா
ரருணனைத் தடுக்குமோ வன்னையே
தளருளக் கொடிக்கோர் கொழுகொம்பாய்த் தாங்குஞ்
சகத்தின்தாய் நினைமறந் தாரு
முளரொனி னடியா ருயர்வுதோன் றுதே
னுளர்குன்றை வீரமா காளி 171

கெடுதவஞ் ஞானங் கெடாமைமெஞ் ஞானக்
கினியுன்றாள் கிட்டிமற் றனைத்தும்
விடுவதென் றறைபும் விதியினா லுணர்ந்தும்
விடையமேல் விழைபமுன் விதித்த
கொடுமையேன் விதிக்கென் குறைகொ லோபுரிந்தேன்
கொந்தளி கூகூவென் றலா
நெடுவழு வளக வழகியார் குடைநீர்
நிலைக்குன்றை வீரமா காளி 172

கோடியு மலவிக் குவிலல மருமென்
குழைமனச் சளமெடுத் தியம்பி
னுடிய பாம்பும் வாடிய மாமு
மன்னமும் நீர்விரும் பாவே
ஆடியின் றளமுங் கனகவா சலுமுத்
தணிச்சுவர் பவளக்கால் வளையு
மூடலார்க் கொன்றை நூறெனக் காட்டில்
லுடைக்குன்றை வீரமா காளி 173

காப்புநீ புரியா யெனினெனைக் காக்குங்
கடமைத்தாய் தந்தையு மதற்குட்
கூப்பியாண் டனையென் கதியென்று மெனநீ
குறிக்கிலே போலுமென் செய்கேன்

பார்ப்புகள் வழிபார்த் திருப்பமெல் லிறைக்குப்
பறந்துபோய்ப் பட்சிகள் மீண்டுந்
தோப்புகள் புகக்கல் யாணவீ டெனக்காண்
ருனிகுன்றை வீரமா காளி 174

வாக்கரு திலையேன் வரந்தரத் தினந்தன்
மனமெய்வாக் கால்வரும் பவந்தோய்
கிரக்கிரு வினைவா யிருண்மலக் கிரியைக்
கிழித்தெழுங் கிரணசூற் பாணி
காக்கமழ் மலர்தூய்த் தானந்தக் கண்ணீர்
கழன்மலர் கழுவவே தழுவச்
சுராக்குழு நரராய்த் தோன்றமா தவஞ்செய்
தொடர்க்குன்றை வீரமா காளி 175

மருளுடைப் புவியின் மாதரா மதமத்
தருந்திய மனக்கவி திரிந்து
னருளுடைப் புததாண் மறந்துதிண் டாடிவ்
வஞ்ஞான நோய்க்கவு டதஞ்சொல்
தெருளுடைச் சிகிரித் தேர்வரும் பவனி
செழிகட லெனத்தெளி தடாகத்
துருநிழல்த் தோற்றத் துன்னுமீன் களுங்கண்
டுயுங்குன்றை வீரமா காளி 176

இலைமிசை எறும்பூர்ந் தனவயி ருரோம
மிளங்கிளங் கொடிகள்வாய்க் கனியின்
வலைமிசை யிரங்கும் பறவையின் மலையு
மாபெரும் பாவிக்கென் றருள்வாய்
மலைமிசை யலைகள் சுருண்டெறி கடன்மேய்
வானொலித் தெழுந்துமின் னுதல்போற்
றிலைமிசைக் கயமஞ் சனக்குட மெடுத்தூர்
தருங்குன்றை வீரமா காளி 177

ஓமையுங் கிலியுஞ் சவ்வும்றீங் கென்ப
வுயர்சிதம் பரமட்ட வாலைக்
காமையாஞ் சூட்ச மூலமந் திரமென்
றருளுமம் பாலிகா நமஸ்து
சீமையோர் திரளை நீந்திக்காண் பரிதென்
தேவரார்ச் சிக்கும்பச் சிலைபோன்
மாமைகொள் கிளிகள் வந்துவந் திரங்கு
மயின்மலை வீரமா காளி 178

அவ்வெழுத் தண்டத் தஞ்சுகுஞ் செழுத்தா
யடங்குமோவ் வெழுத்தென்னு ளறியச்
சவ்வெழுத் தொடும்ரீங் காரசி காராட்
சாத்தும்வீற் றிருந்தற் பரையே
செவ்வையென் றெளித்த கிடங்கில்வீழ் கரிகள்
சீறுத லுலகத்தீர் பிறர்சீர்
வவ்வன்மி னெனவாய் விட்டுரைப் பதென்ன
மதிகுன்றை வீரமா காளி 179

சிம்மொடு ரம்முமுக் கோணுறச் செரித்தே
தேர்ந்தக நசிமசி யெனவோ
தும்மடி யவர்பேர் சொல்லவெம் பேய்நோய்
சூழ்விஷ மொழிந்திடா துறுமோ
நம்மின மெனவா ழேரிநீர் குடையும்
நற்கரி தணைப்பக டணுகித்
திம்மென வடிபட் டிராலென்றப் புரம்போய்த்
திரிகுன்றை வீரமா காளி 180

ஆகிய நெல்லி யவித்தநீர் தனிற்குஞ்
சாமணக் கெண்ணைசற் றாற்றி
வாகுற வருந்தப் பேய்கண்மூ வாறும்
மறுபடி வருங்கொலோ மாதா

பூகநற் குலைபோற் பொலிசடை யடியார்
பொய்கையிற் குடைந்திடுந் திருநீ
ருகங்கண் டெமன்முன் பட்டபா டெண்ணி
யகல்குன்றை வீரமா காளி 181

தின்றிடா மரத்தின் கிழங்குகூ விளங்காய்
சிறந்தபா தாளமூலி யின்வே
ரொன்றுற நெய்சேர்த் துடன்புகைத் திடப்பே
யொடிடா திருக்குமோ வுமையே
கன்றிடு நோய்கொண் டறிந்திடா மாந்தர்
மல்லிழை கடுக்கன்மோ திரங்கொள்
மன்றினு ளிரவும் வனங்கள்போ யடையு
மயின்மலை வீரமா காளி 182

இருபத்தைந் தறையிற் பத்தொடு பதினெட்
இசைதிரி பனிரெண்டைந் தாறும்
வருவித்த மிழுமெ மொம்சி வாயநம
வெனக்கடை நடுதொட் டுமாற்றத்
தெரிவித்த குருவே சிதம்பரத் தாடுஞ்
செயலையான் செப்பவும் படுமோ
பருவத்திற் பழுத்த பத்தருக் கனம்போய்ப்
படைகுன்றை வீரமா காளி 183

மசிமசி யெனவும் நசிநசி யெனவும்
வசிவசி தசிதசி யெனவும்
கசிகசி யெனவுங் கழறுமொவ் வொன்றின்
கருத்துமெற் குரைசெய்கற் பிணியே
பசிபசி யெனவே பகர்ந்திடா திரவு
பகலினு மன்னமீந் திவணே
வசிவசி யெனவே வர்புருத் தகஞ்சூழ்
மயின்மலை வீரமா காளி 184

அகமுடற் றீட்டிர்த் தமர்ந் துளங் கநீ
றதனின்மா யாவெழுத் தமைத்து
வகையுட னரிவோம் கிரியும்நன் நமசி
வாயமென் றவர்க்குண்டோ வறுமை
ககனமுற் றுலவும் வெண்புறுக் கூட்டங்
கார்முகி லிடிக்கரண் டிரங்கி
மகிமைகொள் வாண வேடிக்கை போலு
மறைகுன்றை வீரமா காளி 185

வாவாவா வெனவும் நங்குமங் கெனவும்
வங்குசிங் கெனவுங்காண் மகிமை
தேவாதி தேவர் செப்பிடா ரம்முஞ்
செயலெனப் பயிலும்பைங் கிளியே
பூவாலே மறையும் பொய்கையா மனைமேற்
பூமகா தேவிபள் ளிகொள்ள
மூவாமின் னார்செய் பணிகள்போ லனங்கண்
மூரல்குன்றை வீரமா காளி 186

சத்தியுஞ் சிவனீர் வீரமுஞ் சமனுய்ச்
சாரித்தைம் முடிப்பதாய் மணலுண்
மெத்தியோர் சாம மெரித்தொரு பணமாய்
விதித்திடச் சன்னிவாய் வசதி
பித்தங் கிராணி சூலைபல் பிணிக்கும்
பிரசண்ட மென்றமுத் தாசான்
சித்தமீ திருந்தென் சென்னையிற் பதஞ்சேர்த்
திடுங்குன்றை வீரமா காளி 187

பொன்னனப் பிரேக நவநீத மதனைப்
பொற்கையான் சாற்றினுற் சாம
முன்னறைத் தறைத்து மைம்பது புடந்தீர்
மூலம்நீ ரிழிவுதா தயர்வு

மின்னுநோய் பிறவு மிருக்குமோ கல்பம்
வேறெதென் றுரைத்தமுத் தாசா
னின்னக் குடிகொண் டென்னங் குதிகொண்
டெழுங்குன்றை வீரமா காளி 188

காந்தமு மயமுங் கெந்தியிந் திலிங்கங்
காரமும் பூரமும் நசைதீர்த்
தார்ந்தவோ ரிடையாய்க் குமரிவேர் நீர்வார்த்
தறைத்துவெங் கலத்திட்டென் றாழ்முன்
கூர்ந்துமும் முறைவைத் தாபத்துக் களவாய்க்
கொடுவெனுங் குருமுத்து சாமி
சார்ந்தகன் மனதிற் சயனித்தெற் கமுதந்
தருங்குன்றை வீரமா காளி 189

மலைவில்லான் விந்தை கெந்தியை மேனி
வார்த்தறை குகையுண்முப் பூநீர்
குலவவிட் டிருமட் சிட்டிவாய்த் துணிசெய்
தோர்கட மணலிட்டே புடம்வை
நலவனுப் பானத் திடுநாலா யிரத்து
நானூற்று நாற்பத்தெண் ணோய்போம்
வலதெனுமுத்து சாமிபோலெனையு
மகிழ்குன்றை வீரமா காளி 190

கமுகிளங் குலைமேற் கருங்குயி லிருந்து
கமழுமாந் தளிர்கிழித் திசைக்குஞ்
சமுகமா ளிகைமேற் றுதியோ டுலவுந்
தடங்கண்ணார் தயைவிடப் படுமோ
குமுகுமு வெனமோர் கடைந்திடு மணமுங்
குடில்கடோ றுருக்குநெய் மணமு
மமுதுண்டு ணயரு மமரர்க்கும் பசிதந்
தழைகுன்றை வீரமா காளி 191

கத்திரி நலம்பூ சனிகொடி தெனப்பல்
கைகள்பார்த் துய்வதோ கடமை
கத்துறு மாழிக் கறையெனத் ததும்புங்
கண்ணிமை வாவென வழைக்குஞ்
சித்திரத் தமையாப் பெண்கள்சிங் காரச்
செவ்விள நீர்முலைக் களப
முத்திரை போலு முழுநில வெழும்பு
முதற்குன்றை வீரமா காளி 192

எழுகடன் மணலின னவின்மிக் கலவோ
வேழைநெஞ் சேயுகம் பலநா
ளெழுமுடற் புகநின் றிழிந்தமை போது
மினிப்பிறப் பிறப்பிரு டீர்க்கு
முழுமுதற் றுய்பால் வம்மினென் றழைத்துன்
முன்வரு நல்லநாள் வருமோ
பழுதையின் பாம்பென் றுலகமால் பறித்தார்
பணிகுன்றை வீரமா காளி 193

நமதெனக் கொள்ளல் விடுத்லு மறந்து
ஞானவு பேட்சையும் நழுவிச்
சமமெனச் சொரூப நிலையுலை யாமற்
சாந்தனு யிருக்குநா ளுளவோ
கமகம வெனப்பூ நறுமணங் கமழுங்
கடைதொறு மெண்ணுகா சோசை
நமநம வெனவெள் ளானைபோற் குவிந்து
நனிகுன்ற வீரமா காளி 194

அனைத்துயி ருளும்நின் றகமக மெனச்சொற்
றறியுமோ ரான்மசொ ரூபந்
தனைத்தெரி யாமற் றபனன்முன் புழுப்போற்
றட்டழிந் தலமறப் படுமோ

நினைத்தவங் கிடந்து பெற்றவோர் மகவோர்
நேர்ந்துநா ளுள்வளர்ப் பதுபோற்
றனித்தனி மனைமுன் பூஞ்செடி கொடிகள்
டழைகுன்றை வீரமா காளி 195

பேசுஞ்சா மியையுட் பேணிடா தகத்தாற்
பிறவிக்காட் டலையுமோ பிள்ளாய்
கூசுமா பிரம தேசுகித் தன்றிக்
கோடிதீ வட்டிபோ டுகினும்
ஆசுலா மனமா சகன்றிடா தெனவோ
ராறுதல் கூறுவா ரனுப்பாய்
மாசுலா மாத்தின் வழிபெரு மருவி
வருங்குன்றை வீரமா காளி 196

வந்துவந் துழக்கு மனக்கரி பலநாள்
வளர்த்தயென் றவக்கரும் பனைத்து
முந்தவோர் கணமுன் றின்றெனை மருட்டி
மோசஞ்செய் யாதுனை முறையிட்
டெந்தநே ரமுமேத் தெடுக்கின்றேன் றயைசெய்
தெனையுமென் றவத்தையுங் காப்பாய்
மந்திபாய் விசையா லுதிர்கனி பிதிர்தேன்
வழிகுன்றை வீரமா காளி 197

புவிசெய்வெந் துயராப் பூட்டுறும் பிறவி
போயினும் போய்விடா தறினுஞ்
சிவிகையும் பரியுந் தேரும்வெள் விடையுஞ்
சிங்கமும் யாழியிங் கணமுந்
தவிசெனப் பொருந்த வூர்வலம் வருமுன்
றுண்மறந் தொன்றைநா டுவனே
கவிசெயும் புலவோர் கற்பனைக் கடங்காக்
கதிக்குன்றை வீரமா காளி 198

தரையின்மீ ண்டுதியாத் தன்மையு மணையிற்
றன்னிக ரறறவும்வாழ் மகவும்
சருவசௌ பாக்கிய செல்வங் கல்வியுமித்
தமிழ்வல்லார்க் கருளிக்காத் தருள்வாய்
வரைமிசை வனந்தூ வலர்நிலக் கழைவேய்
வாழைதேங் குதல்குடை விருது
புரமிசை கவரி யாலவட் டமும்போற்
பொலிகுன்றை வீரமா காளி 199

தருவிவ கார தசையிற்சத் தியதாய்ச்
சையோக நிலையின்மௌ னமதா
யருவுரு வாகும் பொருளையுன் னருள்கொண்
டடைகுவேன் கணபதி வாவென்
றருவிசாய் பணையூ ரப்பனஞ் சேலென்
ருனந்தத் தாண்டவ மாடக்
குருவடி வாய்வந் தெனதுளங் குடிகொள்
குணக்குன்றை வீரமா காளி 200

வாழிநீ வளருங் குன்றைமா நகரம்
வாழியுன் மலையின்பொற் கோயில்
வாழியுன் கனக வாசல்வாழ் கணங்கள்
வாழியுன் றிருச்சந்நி தானம்
வாழிகைத் தலஞ்சூல் வாழிதண் டையந்தாள்
வாழிநீ யேறுஞ்சிங் கேறு
வாழியுன் கருணை விழிமுகப் போதும்
வாழிஓம் வீரமா காளி 201

குன்றக்குடி வீரமாகாளிமாலை
முற்றுப் பெற்றது.

---

# குன்றக்குடி வீரம்மைக்கண்ணி.

---

காப்பு.

ஓரெழுத்தாய் மூவெழுத்தா யொப்பிலா தஞ்செழுத்தா
யாறெழுத்தா யெட்டெழுத்தா யன்பத்தி—யோரெழுத்தா
யெண்ணுவென நிரைவா யீண்டுபடைத் தீந்துந்தீ
கண்ணுதற்கு மெட்டாத் தாள்காப்பு.

1 சேவித்தைம் பூதசுத்தி செய்துவட்ட சட்கோணத்
தோவியமுன் னுவிதழிட் டுள்ளெழுது முக்கோண
பூவில் ரீங்காரமிட்டுப் பூசைபண்ணிக் கண்மூடி
மூவெழுத்தை யுச்சரித்தால்—என்வீரம்மா
முன்னேவந்து நிற்பாளோ

2 அட்டியிலா தாயிரத்தெட் டண்டமா டன்றிறலாண்
டிட்டகலைக்ஞான மிறப்புதிப்பிலா மைகவந்
தொட்டிருத்த னெஞ்சுக்கஞ் சொற்பலிதஞ் சந்தோட
மட்டசித்தி முத்தியெல்லா மென்வீரம்மா
அடியாருக் குள்ளதுவே

3 தம்மாகம் நித்தமிகஞ் சத்தியமென் போரைவிட்டுச்
சும்மா விருப்பதற்கோர் சோதிவட்டங் கிட்டுதில்லை
சும்மாவிருப் பதற்கோர் சோதிவட்டங் கிட்டுமென்று
லம்மா வம்மாவென்று—என்வீரம்மா
அறைச்சணமும் நீங்கேனே

4 ஆங்கார மில்லா தறிவி லகங்கோர்த்துத்
தூங்காமற் றூங்கச் சுழிமுனையைக் காண்கிலனே
தூங்காமற் றூங்கச் சுழிமுனையைக் கண்டுகொண்டாற்
றீங்காவல் பாவமெல்லா—மென்வீரம்மா
தீப்பிடித்து வேகாதோ

5 கல்லேனு மோர்நாட் கசிந்துருகுமென்ப ரென்னெஞ்
செல்லா விதத்து மிழகாமைக் கென்கடவேன்
அல்லார் பொழிற்சிகிமே ரன்னு யடியேற்கோர்
செல்லேனுஞ் சொல்லுகவே—என்வீரம்மா
சோதனை செய்யாதுவந்தே

6 கொல்லா விரதமிராக் குண்டனுனைக் கண்டொருக்காற்
பல்லாண்டு கூறுப் படியான் மிடியானென்
தில்லாரை நம்பியில வார்ந்த பூங்கிளிபோற்
செல்லா தளித்ததுபோ—லென்வீரம்மா
சீமையெங்குங் காணேனே

7 கல்லா மனத்தை களைத்திறுக்குஞ் சற்குருவின்
சொல்லாற் பிழைக்குந் துறையறிந்து நிற்கேனோ
சொல்லாற் பிழைக்குந் துறையறிந்து நிற்கினிங்கன்
பொல்லாத கன்மமெல்லா—மென்வீரம்மா
போரேனென் றேடாதோ

8 ஆழித் துரும்பா யலம்புதம்மா யென்மனதோர்
நாழிகைக்கும் நில்லென்று நாட்ட முடியவில்லை
நாழிகைக்கு நில்லென்று நாட்ட முடிந்துவிட்டாற்
பாழுங் கவலையெல்லா—மென்வீரம்மா
பஞ்சாய்ப் பறக்காதோ

9 மெய்யோடு மெய்யுரச விற்பூட்டு மன்மதனார்
கையோகத் தீச்சூடு தாங்காதவிந் துலர்ந்தேன்
கையோகத் தீச்சூடு தாங்குந் தவமிருந்தால்
கையா உலகமெல்லா—மென்வீரம்மா
காலில்வந்து வீழாதோ

10 என்னத்தைச் சொன்னாலு மேய்த்தோ டகமடங்க
அன்னத்தைத் தின்றுதின் றாலோசித் துந்துயின்று
லென்னைத்தெரிவதென்னு ளெந்தா யிமையமலை
தன்னிற் பிறந்தவளே—என்வீரம்மா
சத்தாழி யூர்க்கிளியே

11 அன்னக் கவலை யதுபோகப் பொன்கவலை
கன்னிக் கவலை கடைசிவரைக் குங்கவலை
யென்னத்துக் கென்னை யிகத்திற் படைத்தாய்நீ
இன்ன மிரங்கலையா—என்வீரம்மா
ஏழைமுகம் பார்த்துமின்னே

12 சன்ன பின்னலாகத் தசைமேற் பொலிந்தசென்று
ருன்னை நினைத்துநினைத் தோயா துருகியதாற்
கன்னி வெழுத்தம்மா கையெடுத்து வாழ்த்துதுமே
அன்னையே வந்திடுக—வென்வீரம்மா
அடியார் குழாம்புகவே

13 முன்னை வினைக்கொடியை மூட்டோ டறுத்திருக்க
அன்னவிசார மடியோ டொழியு தில்லை
அன்னவிசார மடியோ டொழிந்து விட்டால்
கன்னன் குபேரனெல்லா—மென்வீரம்மா
கைகட்டி நிற்கானே

14 ஆசைக்கடலி லகப்பட் டடைந்த துன்ப
மீசனுக்குஞ் சொல்ல வியலாதம் மம்மவம்மா
மீசை துடிதுடிக்க மீமிசைநின் றூடாதோ
ரோசை மயத்தழைத்தே—யென்வீரம்மா
வுயிர்ப்பொருளைக் காட்டுதியே

15 மோசக் கபடநெஞ்ச மூளிகடந் தோற்புதரின்
பாசங் கழிந்தாற் பணமெதற்கு வீடெதற்கு
வீசங் கணமு விடுவனோ யானுன்றுண்
நாசி நுனியினிற்கு—மென் வீரம்மா
ஞானமணிச் செஞ்சுடரே

16 நேச மடவார்க்கு நிரம்ப உடமைபண்ணக்
காசைப்பணத்தை யெண்ணிக் கைநீட்டிக் கேட்கலையே
தாச னுனக்கே சரணு கதியடைந்தே
னுசாரந் தப்பாது—என் வீரம்மா
அமுதூட்டி யாளுகவே

17 பல்லுதிர்ந்து கூனியபின் பண்டார வேடமிட்டுச்
சொல்லுறுதி கெட்டுஞ் சுடுகாடு புக்கெரிவீர்
மெல்ல மறந்துசெத்தால் மீண்டுமுயிர் வந்திடுமோ
அல்லும்பகலு மன்போர்ந்—தென் வீரம்மா
அருளருளென் றேற்றுமினே

18 பாசா பரண்மெல்லாம் பாழாக்கி யோர்தனிவீ
டாசா னுரைத்தருளு மச்சரத்தை யுச்சரித்துப்
பேசா மவுனமுற்று பேரின்ப சாகரத்தே
ஆசாரந் தப்பாது—என்வீரம்மா
அருகில்வைத்துப் பாரேனே

19 தீவாழி சூழுமிந்தத் தென்னாட்டு மன்மதன்கைப்
பூவாளி பட்டுநொந்த புண்ணாற மாட்டாதோ
பூவாளி பட்டுநொந்த புண்ணாறு விட்டாலும்
நாவார உன்புகழை—என்வீரம்மா
நலுங்குவைக்க மாட்டேனே

20 பூவென்ற மேனியெல்லாம் புண்போல நோகிறதே
வாவென்று சொன்னாலுன் வாய்முத்தஞ் சிந்திடுமோ
கோவென் றழுதுறவோர் கூட்டிலெரி மூட்டுமுன்னே
காவென் றழுதசத்தம்—என் வீரம்மா
காதினுழை யாததென்னே

21 குத்திகினைப் பெண்மனத்தைக் கொல்லுதே மெல்லவொரு
முத்தங் கொடுத்தால் முகங்கருகிப் போய்விடுமோ
முத்தங் கொடுத்து முகங்கருகிப் போனாலு
மத்தங் கொடுத்து—என் வீரம்மா
ஆளாக்க மாட்டேனே

22 போகா தகத்தைப் பொறுமையுட னுதரிக்க
ஆகாத கோப மடியார்க் கழகலவே
ஆகாத கோப மடியோ டழிவதற்கு
சாகாத யோகசித்தி—என்வீரம்மா
சடுதிவந்து கூடாதோ

23 சங்கை யறுப்போரைத் தாக்க மறலிவிட்ட
மங்கையரைச் சற்று மறக்கமனங் கூடுதில்லை
மங்கையரைச் சற்று மறக்கமனங் கூடுமென்று
லெங்கெங்கு சென்றுறு—மென் வீரம்மா
இரணமழை பெய்யாதோ

24 ஆவித்துணையா மருட்பதத்தைப் பூஜை பண்ணப்
பாவி மனநிற்கப் படியாது கெட்டலைந்தேன்
பாவி மனநிற்கப் படித்திருப்பே னுமாயின்
கோவில் குளங்களெல்லா—மென் வீரம்மா
கும்பிடவு மாட்டேனே

25 காமனகலக் கபாலச் சுடர் வெளிமேற்
பூமனரீசன் புணர்ந்த யிடங் காணேனே
பூமனரி யீசன் புணர்ந்தயிடங் காண்பேனே
லேமனென்ற அச்சமெல்லா—மென்வீரம்மா
இருகாத மோடிடுமே

26 உள்ளத் துனைவைத் துருத்தோ டிரைஞ்செளக்கோ
ரெள்ளத் தனையு மிரங்கா திருத்தனன்றோ
கள்ளத் தனனுய்க் கருதலொரு தலையாய்த்
தள்ளத் தகாதசீ—யென் வீரம்மா
தஞ்சமரு ளஞ்சேலே

27 மூக்கு முனையே முழித்திருந்து பார்த்தாலுண்
ணுக்கு நடுவே நடனசத்தங் கேட்குமன்றோ
நாக்கு நடுவே நடனசத்தங் கேளாமல்
வாக்குமன காயமெல்லா—மென் வீரம்மா
வருந்திவிட ஞாயமுண்டோ

28 வேதாந்த சாரமம்மா விரித்தா லபாரமம்மா
நாதாந்த வீட்டி ரகசியத்தைக் காணேனம்மா
நாதாந்த வீட்டி கசியத்தைக் காண்பேனேற்
சாதாந்த போதனனு—என்வீரம்மா
சர்வசித்து மாடேனே

29 கொல்லா விரதங் குடிகொண் டிராப்பகலு
மில்லாத வீட்டி லிருக்கவரந் தாராயோ
பொல்லா மனிதர்தமைப் பூசனைசெய் தாசுபயின்
றல்லாசமாய்த்திரிந்தே—என்வீரம்மா
உண்டுறங்கி மாழாதே

30 கொல்லான் புலான்மறுத்தான் கூட்டுறவை வேட்டாமற்
றல்லாரைச் சேர்ந்தா லறிவுகெட்டுப் போகாதோ
அல்லாரைச் சேர்ந்து அறிவுகெட்டுப் போகாமற்
சொல்லா லுனைவணங்கி—என்வீரம்மா
துரியவழி கூடேனோ

31 பொய்ப் படிப்பைக்கற்றே பொழுதைக் கழித்தேனே
மெய்ப்படிப்பைக் கற்றே வினைதீர்க்க வெண்ணிலனே
மெய்ப்படிப்பைக் கற்றே வினைதீர்க்கு மாறெனக்கு
கைப்படிக நீறளித்தே—என்வீரம்மா
கடைக்கண்ணாற் பாராயோ

32 முன்னை வினைநீக்கு முக்கோண சக்கரத்து
ளன்னை யுனைக்காண தலைபோ லலைகிறனே
அன்னை யுனைக்காண தலைபோ லலையாமற்
றன்னையறிந்து கொண்டா—லென்வீரம்மா
தனித்தூமை யாகேனோ

33 மடத்தடிமை கொண்டே மமதை பிடியாதுன்
றடத்தடிமை கொண்டே சமையா தலைந்தேனே
தடத்தடிமை கொண்டே சமைந்திருப்பே னுமாயின்
நடத்தா நடத்தையெல்லா—மென் வீரம்மா
நானடத்த மாட்டேனோ

34 வேத மறியேன் விதித்த விதியறியேன்
சாதங் கரியோர் தாமு மறந்தறியேன்
சாதங் கரியோர் தாமறக்கப் பெற்றாலோ
பூதமைந்துஞ் செத்தயிடம்—என்வீரம்மா
புல்முளைத்துப் போகாதோ

35 கண்கொள்ளாச் சோதிக் கடவுணிற்கு மாலயத்து
ளெண்கொள்ளாத் தேவ ரிருக்குமிடங் காணேனே
எண்கொள்ளாத் தேவ ரிருக்குமிடங் கண்டாலோ
பெண்களென்ற மாயமெல்லா—மென் வீரம்மா
பிரிந்தோடிப் போகாதோ

36 கஞ்சா வபின்சாக்கைக் கண்ணுலும் பாராம
லெண்சாண் பனங்க ளிரக்கவழி காணேனே
எண்சாண் பனங்க ளிரக்கவழி தெரிந்தா
லஞ்சாத வீரனென்றே —என்வீரம்மா
அண்டமெலாஞ் சுற்றுவனே

37 ஓயாக் கவலைக் குடம்பெடுத் சண்டாளன்
மாயாப் பிறவி மயக்கந் தெளிவதென்ருே
மாயாப் பிறவி மயக்கந் தெளியுமென்ருற்
ருயான நீநாளு—மென் வீரம்மா
ஜலத்திலிட்ட வுப்பனவே

38 பாலிளநீ ரெட்டுள் பசும்பருப்பிக்கா னெய்கற்கண்
டேலம் கனிரசம் பாகிட்டிளஞ் சூட்டிற்றிரட்டிச்
சால மடவார்க டாந்தனியிற் றந்தாப்போன்
மேலுக்கு நல்லதென்றே—என்வீரம்மா
விருந்துவைக்க மாட்டாயோ

39 தன்னை மறந்து தலைகீழாய் நில்லாம
லுன்னை நினைந்தென் னுருவந் தெரியேனே
உன்னை நினைந்தென் னுருவந் தெரிவேனே
லென்னென்றே சொல்வேனு—னென் வீரம்மா
ஏகவெளியாய்ப் போமே

40 பாசாடவி யனைத்தும் பாழாக்கிப் பார்க்காமற்
காசாசை கொண்டே கலங்கித் தவிக்கிறேனே
காசாசை கொண்டே கலங்கித் தவிக்காயல்
ஆசா னுரைத்தபடி—என்வீரம்மா
அறிவறிந்து வாழ்வேனே

41 சீரார் மயூரகிரிச் செவ்வேளைப் பெற்றெடுத்த
வீரமாகாளி நீ விளையாடும் வீடறியேன்
வீரமாகாளி நீ விளையாடும் வீடறிந்தாற்
பாராத காட்சியெல்லா—மென் வீரம்மா
பாராதும் போவேனே

42 சாங்கால முன்னே சமாதிவழி தேடாம
லாங்காரத்தாலே அறிவுகெட்டுப் போகலாமோ
ஆங்காரத்தாலே அறிவு கெட்டுப் போகாமல்
வாங்காமல் விட்டகுறை—என் வீரம்மா
வலியவந்து சேராதோ

43 வஞ்சம் பொதிந்த மனத்தா னினத்தைவிட்டுப்
பஞ்சம் பிழைக்கப் பரதேசி யாதனன்றோ
பஞ்சம் பிழைக்கப் பரதேசி யானாலும்
கொஞ்சங் கருணைவைத்தா—லென் வீரம்மா
குபேரனாய்ப் போகேனோ

44 ஆணிப்பொன் னம்பலத்தே ஆடுமுன் சன்னதிமுன்
காணிக்கை யென்றென் கருத்தே யிருத்திவைத்தேன்
காணிக்கை யென்றே கருத்தை இருத்திவைத்தும்
நாணிப் பதுங்குவதே—னென் வீரம்மா
நவலோகம் பொன்படவே

45 அன்னபா னாதிக் கலையா திலகிழங்துண்
டுன்னை யுபாசித் துயிர்ப்பொருளைக் காணேனே
உன்னை யுபாசித் துயிர்ப்பொருளைக் கண்டுகொண்டா
லென்னை யெவர்நிகர்வா—ரென் வீரம்மா
என்னையெண்ணிக் கொள்வேனே

46 கள்ளமன மடடா காமவெறி கொண்டதென்றே
உள்ளதைச் சொன்னா லுரோசமுண் டாகுமம்மா
உள்ளதைச் சொன்னா லுரோசப்படா திருந்தாற்
கொள்ளைகொண் டண்டமெல்லா—மென் வீரம்மா
கொடிப்போட்டு வாழாரோ

47 பாசாங்கு செய்யாதே பையலென வையாதே
ஆசாரங் கொய்யா தளவோடு பேசுகின்றே
னாசாரங் கொய்யா தளவோடு பேசுவதாற்
பூசானு பூதிதா—என் வீரம்மா
புருவமையம் வாராயோ

48 ஊருக்கூ ரோட்டி உருக்குவது நல்லதல்ல
ஆருக்கு மஞ்சி அறியேன் சிறியேனே
ஆருக்கு மஞ்சி அறியேனெ னற்கதிர்ந்து
கோரக் குணங்காட்டி—என் வீரம்மா
குதிக்காது வந்தருளே

49 இன்னந் தெரியலையா எத்தனையோ சொன்னபின்னும்
முன்னஞ் சிவன்கொடுத்த மோகவெறி கொண்டாயோ
முன்னஞ் சிவன்கொடுத்த மோகவெறி கொண்டாலும்
கன்னத்திற் கையைவைத்தே—என் வீரம்மா
கடுகடுத்து நிற்பதென்னே

50 ஆனமட் டுஞ்சொல்லி யழுதேற் கொருபோதுந்
தேனமட் டுன்பாலே தெளிந்தெடுத்துத் தந்திலையேன்
தேனமட் டுன்பாலே தெளிந்தெடுத்துத் தந்திடவே
வானமட் டளாமலைபோ—லென் வீரம்மா
மகிழ்ந்தெழுந்து வந்தருளே

51 தேனு லபிடேகஞ் செய்துனது கோவிலுக்குட்
கானுவி னெய்யூற்றிக் கமலநூற் றீபமிட்டு
மானு ரொடத்த மலரெடுத்துன் மந்திரத்தை
நானுவி லுச்சரித்தே—னென் வீரம்மா
நடந்துவந்து காப்பாயே

52 எத்தனையோ குற்ற மெதிர்த்தடிமை செய்தாலு
மத்தனையு நீபொறுப்ப தம்மா நின்பாரமதே
சத்தி பராபரியே சங்கரன் பாகத்திருக்கும்
முத்தி மணிவிளக்கே—என் வீரம்மா
முழுநீலப் பெண்கொடியே

53 சின்னஞ் சிறியவளே சேல்விழித் தாடாதகையே
மன்னுந் தவஞ்சேர் மலையரையன் புத்திரியே
இன்னுங் கருணை இரங்கா திருப்பதென்னோ
என்னின்னுஞ் செய்யினுமே—என் வீரம்மா
எனைக்காப்ப துன்கடனே

54 அங்கிங்கு மோடிவினைக் காளா கிடாதுனது
செங்கமலத் தாளென் சிரமீ தெப்போதுவைப்பாய்
மங்கையர்கள் சூழ மனப்போதும் வீற்றிருக்கும்
அங்கயற் கண்ணியென்னு-மென் வீரம்மா
ஆதிபா மேஸ்வரியே

55 என்குற்ற மார்செயினு மீகையுடன் யுத்திசொல்லித்
தன்குற்றம் பாராது சண்டைபல செய்தேனுன்
தன்குற்றம் பார்க்குந் தவமெனக்கு உண்டானல்
நன்குற்ற நின்னருளே—என் வீரம்மா
நானடைய மாட்டேனே

56 மாறுதலைக் கண்டே மயங்குமென்னை யாதரித்தோ
ராறுதலைச் சொல்லு மடியாரைக் கண்டிலனே
ஆறுதலைச் சொல்லு மடியாரைக் கண்டுகொண்டால்
ஆறுதலை யப்பனுக்கே என் வீரம்மா
ஆளாக மாட்டேனே

57 பெண்டுபிள்ளை யென்றே பிரமை பிடித்திடுமா
றண்டத் தலையவிட்டே ஆட்டினுற் றுங்குவனே
அண்டத்தலைய விட்டே ஆட்டாது னன்புகொண்டு
பண்ட மலர்ப்பதத்தை—என் வீரம்மா
பரிசெனத் தந்தாளுகவே

58 செக்சச் சிவந்த நின்றண்சீதாண் வணங்குவண்ண
மிக்கத் தவசுசெய்ய வேதா விதித்திலனே
மிக்கத் தவசுசெய்ய வேதன் விதியாவிடினும்
அகத்தா னீபார்த்தா—லென் வீரம்மா
அதற்குமேற் கிட்டாதோ

59 தாயான நீயிருக்கத் தாயிலாப் பிள்ளையைப்போற்
சேயா னழுதலாத் தெய்வமே சம்மதமோ
சேயா னழுதலாத் தெய்வமே சம்மதித்தால்
நீயாரு நானுரென்—றென் வீரம்மா
நிதங்கலக மாய்விடுமோ

60 கற்றதனு லீண்டு கருவமுற்றி யானலேந்தாற்
பற்றறுத்து நிறகப் படிப்பதெந்தக் காலமம்மா
பற்றறுத்து நிற்கப் படியா திருக்கும்வரை
உற்றனைப் பூஜைசெய்து—என் வீரம்மா
உய்யுமா றெங்ஙனமே

61 வாராத செல்வமெலாம் வந்தருளு முந்தனிரு
சீரா ரடிமலர்க்கே சேயேன் றினந்தொழுதும்
நாராய ணர்க்கிளைய ஞானே தயக்கொடியே
காரானை யைப்பயின்ற—என் வீரம்மா
கைலாய வாசகியே

62 உன்னையன்றித் தஞ்ச முலகத்தா ரெந்தனுக்கே
இன்ன மனமிரங்கா தென்கொலோ மன்கொலுவாய்
மன்னவரும் போற்ற மயில்மலைக்கண் வீற்றிருக்கு
மன்னை வீரமாகாளி—என் வீரம்மா
அருள்கொழிக்குங் கட்கரும்பே

63 ஆயிரத்தெட் டண்ட மடித்தூசி யென்றிருக்குந்
தாயுனக் கென்னென்றே தனிக்கோயில் கட்டிவைப்பேன்
தாயுனக்குக் கோயில்கட்டுந் தன்மையெனக் குண்டானல்
காயிலை கிழங்குதின்று —என் வீரம்மா
கற்பாந்தம் வாழ்வேனே

64 வஞ்ச ப்ரபஞ்ச மயக்கமற உன்னருளால்
நெஞ்சந் தெளிவதற்கோர் நிட்டைநிலை கிட்டுதில்லை
நெஞ்சந் தெளிவதற்கோர் நிட்டைநிலை கிட்டுமென்றல்
அஞ்சுதலை நாகருக்கே—என் வீரம்மா
அடிமையா னுகேனே

65 வேறுதலைக் காளாய் விடாது கெடாதெனக்கோர்
தேறுதலைச் சொல்லுஞ் சிவனடியார் காணேனே
தேறுதலைச் சொல்லுஞ் சிவனடியார் வந்தாக்கால்
சோருதலை யொழித்தே—என் வீரம்மா
தூங்காமற் றூங்குவனே

66 ஊனுக்கை மற்றினியொன் றூடியாம்புக் காதுன்
ஞானுக் கினியா னடலை கெடுத்தாளுகியே
வானுக்கிணைக் கடங்கு மட்டாரும் பூங்கோதாய்
வானுக்க மோதவரும்—என் வீரம்மா
மதுரை மீனும்பிகையே

67 இட்டங் கொடுத்தாள்வ தின்றேலென் னன்றிகொன்ற
நட்டமுனக்கு நகாதுகொலோ மயிலோம்
பட்ட வைசூரியமே ரம்மனே பெம்மான்பாற்
பட்ட மடைந்திருப்பா—யென் வீரம்மா
பாவாந்த காற்புதியே

68 ஓம்புந் தனத்தியர்க்கு ளோயா துருகிவற்றித்
தேம்பு மெமக்குன் றிருக்கண்பா விப்பதென்று
ளாம்ப லரவிந்த மலராவி சூழ்புலியூர்ச்
சாம்ப சிவனுவப்பா —ரென் வீரம்மா
சட்சமய தாட்ணியே

69 கொண்மூ சுருட்டுகொண்டைக் கோலமுலைச் சேல்விழிவிண்
பெண்மூச் சுற்றென்கொல் பெருமையெற் கென்றேம்புமின்க
டண்ணீர் மொண்டொல்கு முடைதத்தவரு மஞ்ஞைவெற்பாய்
கண்மூடி நிட்டைசெய்தே —என் வீரம்மா
கடைபோகக் காமினிங்கே

70 இற்றெனப்பாற்றே நுங்கட் சீடேற்றம் வேண்டினண்பீர்
சற்றே நினைமின்க டண்டாமரைப் பொருட்டா
ரெற்றே சொழுதருவா ளீர்தாளற்றே லென்னும்
மற்றெதுமொப்பா மெய்பெற்று—மென் வீரம்மா
வந்துவந்து போதியென்றே

71 சேருவப்புணியே சிருட்டிக்கி னென்றனவா
யாருனுற்று நிற்பாரிங்கச் சோவிச்சா வீண்பே
ராரமலர் தலை மண்ணுட்டுவது மூட்டுவது
மோர மனத்தோரா—வென் வீரம்மா
உன்றண் ணளியேலே

72 முழவதிரும் பூங்கோதை மோகாங்க மாதர்கடம்
மழகை வியந்துவியந் தாபாச னேனேனே
அழகை வியக்கா தருளழகை யாம்வியந்தால்
மழைகாற்று வெய்யிலெண்ணு—தென்வீரம்மா
வனவாசஞ் செய்வேனே

73 விற்புரு வத்தூடு விழிவைத்துன தருளாங்
கற்பூர வாசக் கனகாம்புய மடையேன்
கற்பூர வாசக் கனகாம்புய மடைந்தால்
அற்பாயு ளின்றியொன்று—யென் வீரம்மா
அத்துவித மாவேனே

74 பங்கா யரனளித்த பச்சைப் பசுங்கிளியே
சிங்கா சனத்திற் றிருக்கொலுவு கொண்டவளே
செங்கா லடியெமக்கே தீட்சித் தருள்வாயே
லிங்கா ரமைநிகர்வா—ரென் வீரம்மா
எப்போதும் யான்சிவமே

75 துறவன்றி யொன்றுந் துணைக்கொளா தம்புவியிற்
புறவங்க ளுடிப் புவியோர் பசாசெனவே
குரவ னருளே குதிகொள்ள மேனேக்கி
அரகரா யென்றுசொல்லி—என் வீரம்மா
ஆடுவது மென்னளோ

76 கத்திக்கத்தித் தொண்டைகட்டி கண்ணீர் வடித்தழுதுந்
நித்தந் திரிதலைநீ நீத்தாள மாட்டாயோ
நித்தந் திரிதலைநீ நீத்தாளப் பார்ப்பாயேல்
முத்தி யடைவேனே—என்வீரம்மா
மூலாஞ்ஞானம் தொலைந்தே

77 பூரணத்தி லேழுளைத்த புத்தமுதை யுண்ணாமல்
ஆரணத்தைக் கேட்டே அலைந்து திரிகிறேனே
ஆரணத்தைக் கேட்டே அலைந்து திரியாமல்
காரண வாசனருளே—என் வீரம்மா
கண்குளிரப் பாரேனே

78 இன்ப துன்பமெல்லா மிழிமசகமாய் நினைத்து
முன்பதுமத்தாளை உணர்வாரை கண்டிலேனே
உண்பது மத்தாளை உணர்வாரைக் கண்டேனேல்
முன்பவ மெலாந்துடைத்தே—என் வீரம்மா
மோட்சம்பெற்றுப் போவேனே

79 கண்ணுளக் கண்ணாகிக் கைகர வுடம்பாகி
பெண்ணாக் கோராணாகி பேச்சுமூச் சாகியுமே
விண்ணுக்கு நேரே விளங்கும் பெருவழியை
எண்ணி யிருப்பதற்கு—என் வீரம்மா
எழுந்தருளி வாராயோ

80 செப்படிக் கூத்தைப்போல் சிலர்கூடி யோர்பெண்ணை
கைப்பிடிக்கச் செய்யுங் கனமாய மென்னவம்மா
மைப்படியுங் கண்ணார் மயக்கில் வீழ்ந்தா லுனைநான்
எப்படி நினைப்பதுவே—என் வீரம்மா
ஏழைமதி போகாதே

81 ஆள்க்காட்டிப் பச்சியைப்போ லலைத்தலைத்துப் பேசுபெண்கள்
நோக்காட்டை விட்டே நுணுக்கமா யுன்பதத்தைத்
தாக்காட்டிப் பூஜைபண்ணிச் சந்தோஷங் கொள்ளாமல்
சாக்காடை எண்ணியெண்ணி —என் வீரம்மா
சருகாக் கருகிறேனே

82 வினைதீர்க்கு முன்னையல்லால் வேறாரை நானடைவேன்
எனை நோக்கிப் பாராதிருப்ப துனக்கழகோ
எனை நோக்கிப் பாரா திகழ்வையே லென்பாரம்
உனைநோக்கிடா விடுமோ—என் றங்கம்மா
உண்மை யெனக்கோதுதியே

83 மாதவத் தையெல்லா மறக்கடிக்கு மஞ்ஞானப்
பாதகத் தாழ்செய்த பழியாரைச் சேருமம்மா
பாதகத் தாழ்செய்த பழியாரைச் சேர்ந்தாலும்
சாதகத்தைச் செய்வதுயார்—என்வீரம்மா
தங்களை யல்லாம லிங்கே

84 நீரிழிவு குட்டம் நெடுமயக்கந் தாதுநட்டம்
பாரிலெனைத் தொடாராப் பற்பமது தந்தருள்வாய்
பாரிலெனைத் தொடாராப் பற்பமது கிடைத்தால்
நேரிலுனை வணங்கி—என் வீரம்மா
நித்தசுக மெய்துவனே

85 முன்னம் பெரியோர்கள் மூவுலகு மித்தையென்றே
தன்னைமட்டும் நம்பித் தவமுடித்தா ரென்றறிந்தும்
தன்னைமறந் திவ்வுலகைத் தானே நினைத்துழலும்
என்னைப்போல் மூடருண்டோ—என் வீரம்மா
இதற்கோர் நியாயமுண்டோ

86 ஆசை யொழிந்தயிட மானந்தமென்று முன்னோர்
பேசியது கண்டுமகம் ப்ரமாஸ்மி யென்றறியேன்
பேசியதுகண்டு மகம் ப்ரமாஸ்மி யென்றிருந்தால்
வாசியுடன் யோகமுமேன்—என் வீரம்மா
மடமேன் தடமேனோ

87 உற்ற பிடிப்புவிட வோதினர் முன்னோர்கள்
சற்றும் பிடிப்புவிடச் சம்மதியே னயனையேன்
சற்றும் பிடிப்புவிடச் சம்மதிப்பே னமாயின்
மற்றொருப்பா ரில்லானாய்—என்—வீரம்மா
மனோலயம் வந்தெய்திடுமே

88 அறிவா னறிவனவு மப்பொருளாய் தானிருக்க
வெறியா லனேக விகற்ப முரைக்கலாமோ
வெறியா லனேக விகற்ப முரைக்காமல்
குறியாக வுன்னைவந்து—என் வீரம்மா
குருவா யடைந்தனனே

89 நான் மகாவாக்கியத்தி னம்பிக்கை வைக்காமல்
நான் மகாஞானியைப்போல் நடிக்கும் வெட்கங்கெட்டவனே
நான் மகா ஞானியைப்போல் நடிக்கு மறிவுவந்தால்
தேன்மடை ஞானக்கடலில்—என் வீரம்மா
தினமும் விளையாடுவனே

90 உள்ளத் தருட்சோதி யோயாது மின்னமுத
வெள்ளத்தில் மாயா விஷமகலத் தோய்வேனே
வெள்ளத்தில் மாயா விஷமகலத் தோய்வேனேல்
கள்ளக் கருத்துமுண்டோ —என்வீரம்மா
களிப்பல்லாற் றுன்பமுண்டோ

91 பாலூறுந் தேனூற்றின் பாங்குமிகுங் குன்றைநகர்ப்
பாலூறி லா திலங்கும் பத்தினியே உத்தமியே
மேலூ ரமரருக்கும் வேண்டுபொரு ளீபவளே
மாலூ றணுகாமல்—என் வீரம்மா
வந்துவரந் தந்தருளே

92 தவப்பா லுயருமொரு சன்யாசி தென்பனையூ
ருவப்பா லிருக்குமெங்க ளுண்மைக் குருவுரைத்த
சிவப்பே ரமுதத் திருக்கடலின் மேவனமே
சிவப்பா மணிமலையே—என் வீரம்மா
ஜெயசிங்க வாகனியே

93 தாய்தமரும் நீயெனவே சத்தியமாய் நம்பியுனைச்
சேய்தினமும் போற்றுகின்றேன் சீக்கிரம்வந் தாதரிப்பாய்
பாய்மா வதிலேறிப் பாரேழுஞ் சூழ்ந்துவருந்
தீபொலொளிர் சூலாய்—என் வீரம்மா
சின்னஞ்சிறு கன்னிகையே

94 ஒப்பு வமையில்லாத வுன்னை பணியுமெனக்
கெப்புவனத் தேனுமிடைஞ்ச லென்ப தென்றுமில்லை
இப்படியே யிப்பா வியம்புமடியார் தமக்கும்
கற்பகக்காச் செல்வமுதல்—என் வீரம்மா
கருதியவா றீந்தருளே

முற்றிற்று.

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி. | பிழை. | திருத்தம். | பக்கம் | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|---|---|---|
| 9—31 | 1 | பண்மணி | பன்மணி | 71 | 13 | ளெம்பெரு | னெம்பெரு |
| 9 | 11 | புடையானை | யுடையானை | 72 | 3 | தெவ்லா | தெல்லா |
| 10 | 1 | சீவறை | சீவரை | 72 | 18 | வரழ | வாழ |
| 10 | 4 | கக்கை | கங்கை | 76 | 7 | கிடைய | கிடையா |
| 10 | 6 | த்தும்ப | ததும்ப | 76 | 22 | னெத | னெத் |
| 10 | 8 | லரட்டு | லாட்டு | 82 | 10 | னென்போ | னென்பபோ |
| 10 | 10 | மாமேற | மரமேற | 89 | 2 | எதத்னை | எத்தனை |
| 10 | 15 | நழுவிக்கண் | நழுவிக்கான் | 89 | 2 | வதுண் | வதுன் |
| 12 | 22 | தளைத்து | தழைத்து | 92 | 8 | முகில் | முகிழ் |
| 11 | 22 | ஞனப்பா | ஞானப்பா | 93 | 6 | பிடித்தேன் | பிடித்தே |
| 12 | 16 | திறுக்கு | திருக்கு | 105 | 23 | னிறிஞல் | னீறிஞல் |
| 14 | 8 | வரம் | வறம் | 106 | 25 | தனிந்த | தனித்த |
| 15 | 15 | தெரியுந் | தெரியு | 107 | 16 | முறினிதிஞ் | முறினிலஞ் |
| 18 | 10 | காரிகள் | காரிகள் | 108 | 18 | மசததென் | மசத்தென் |
| 18 | 2 | பணையூர் | பனையூர் | 119 | 7 | பொமு | பொழு |
| 27 | 6 | மரயா | மாயா | 119 | 22 | மாள் | மால் |
| 32 | 1 | பொண் | பன் | 120 | 9 | குவீழ் | குவீழ்ந் |
| 32 | 2 | ராறெழு | ஆறெழு | 121 | 1 | மடுச்சாந் | மடுச்சுறந் |
| 34 | 7 | மெச்சி | மெச்ச | 122 | 2 | கல்லேரல | கல்லோல |
| 34 | 23 | தெச்தி | தெச்சி | 122 | 18 | மூட்கழு | மூட்கமு |
| 38 | 12 | முள்ணி | முன்ணி | 124 | 28 | விரைத்த | விரைந்த |
| 43 | 5 | யல | யுல | 127 | 10 | கெணக் | கெனக் |
| 47 | 7 | கொடு | கொடுத்தே | 137 | 14 | குன்ள | குள்ள |
| 44 | 6 | லத்திற் | சூலத்திற் | 138 | 4 | செல்லே | சொல்லே |
| 51 | 11 | சொல்லா | சொல்லலா | 140 | 21 | பெண் | பென் |
| 52 | 14 | டுகற்ற | டுமகற்ற | 140 | 23 | மூக | முக |
| 56 | 17 | சார்ந்து | சாந்து | 141 | 4 | சென்ருறு | சென்ருலு |
| 57 | 5 | தெச்சிணு | தெச்சிஞு | 141 | 9 | வீரப்மா | வீரம்மா |
| 58 | 13 | பதென்ன | பினென்ஞு | 137 | 9 | நிற்பாளோ | நிற்பாளே |
| 59 | 25 | தேன்று | தோன்று | 147 | 9 | உற்றனை | உற்றநினை |
| 62 | 21 | ருரு | குரு | 150 | 28 | பூராம் | பாவம் |
| 69 | 9 | தவளு | தவழு | 150 | 29 | தங்கம்மா | வீரம்மா |
| | | | | 151 | 13 | தன்ணை • | தன்னை |




# விளம்பரம்.

இந்நூலாசிரியரா லியற்றப்பெற்றிருக்கும்

1. பனையூர் குருநாதன் சந்தவிருத்தம்
2. ,, ,, சதகம்
3. ,, ,, அந்தாதி
4. ,, ,, சிலேடை வெண்பா
5. ,, ,, பதிற்றுப்பத்தந்தாதி
6. ,, ,, பிள்ளைத்தமிழ்
7. ,, ,, ஞானமணிமாலை
8. ,, ,, யமகவந்தாதி
9. ,, ,, காதல்
10. ,, ,, பக்திரச கீர்த்தனம்
11. முத்துச்சாமிபிள்ளை வைத்தியாண்யம்

இன்னும் பிறவும் அடுத்தவிழாவிற் பிரசுரமாகும்.

வைத்தியம்,

மு. கணபதியா பிள்ளை,

குன்றக்குடி.